4 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண்: எம். 879

# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 12 மதுரை 4—1—74 வெள்ளி மலர் 4

## உ. பி. காங்கிரசில் பதவி வெறியாட்டம்

லக்னோ, ஜன. 1—

உ. பி. சட்ட மன்றத் தேர்தலில் போட்டியிட காங்கிரஸ் கட்சியிலிருந்து மனுச் செய்தவர்களில் 5000 பேரை இதுவரை மாநில பார்லிமெண்டரி போர்டு பேட்டி கண்டுள்ளது. இதற்கிடையே காங்கிரஸ் கோஷ்டிகளிடையே சீட்டுகளுக்காகக் கடுமையான சண்டை மூண்டுள்ளது.

மதுரையில்

தோழர்கள்

**அரிகிருஷ்ணக் கோனர்**

(அகில இந்திய விவசாயிகள் சங்கப் பொதுச்செயலாளர்)

**ஏ. பாலசுப்ரமண்யம்**

பேசுகிருர்கள்.

காலம்: 4—1—1974 மாலை 7 மணி

இடம்: திலகர் திடல்




## தமிழக சட்டமன்ற கூட்டம்

சென்னை, ஜன. 3—

தமிழக சட்டமன்றத்தின் பட்ஜெட்டுககு முந்திய கூட்டத் தொடர் இம்மாதம் 17-ந் தேதி தொடங்கும். இந்தக் கூட்டத் தொடர் ஒரு மாதகாலம் நடைபெறும்.

(5-ம பத்தி தொடர்ச்சி)

மாநிலம் காட்டாக் கடை என்னுமிடத்தில் தோட்டங்கள் வாங்கியுள்ளாராம்.

இன்னொருவர் மண்டைக்காடு என்னுமிடத்தில் பெரிய வீடு கட்டியுள்ளாராம்.

# மகாராஷ்டிர பந்த் பரிபூரண வெற்றி

## விலைகளை கட்டுப்படுத்தத் தவறிய அரசுக்கு மக்கள் கண்டனம்

பம்பாய், ஜன. 2—

**மகாராஷ்டிர மாநிலத்தில் இன்று இடதுசாரி கட்சிகள் நடத்திய "பந்த்" பரிபூரண வெற்றி பெற்றது.**

**விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தத் தவறியிருப்பதற்கு, அரசாங்கத்துக்குக் கண்டனம் தெரிவிக்கும் முறையில் இந்த "பந்த்" நடைபெற்றது.**

"பந்த்" நடைபெற விடாமல் தடுக்க போலீசுக்கு அடக்குமுறை கட்டவிழ்த்து விட்டது போலீஸ் துப்பாக்கிப் பிரயோகத்தில் ஒரு சட்டமன்ற உறுப்பினர் உள்ளிட்டு பலர் காயமடைந்தனர்.

இன்று "பந்த்" நடைபெற்றதை யொட்டி ரயில் போக்குவரத்தும், பஸ் போக்குவரத்தும் ஸ்தம்பித்தது.

நகரங்களில் தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் வேலைக்குப் போகவில்லை. கடைகள் மூடிக் கிடந்தன.

பம்பாய் சுற்றுபுற ரயில்களும், நீண்டதூர ரயில்களும் ரத்து செய்யப்பட்டிருப்பதாக ரயில்வே நிர்வாகம் அறிவித்தது.

துறைமுகத் தொழிலாளர்களும் "பந்த்" துக்கு ஆதரவு தெரிவித்து வேலைக்குப் போகவில்லை.

செவ்வாயன்று அச்சிடப்பட்ட பத்திரிகைகளை மட்டும் வினியோகிப்பதற்கு அனுமதியளிக்கப்பட்டிருப்பதாகவும், "பந்த்" தினமான புதனன்று பத்திரிகை அலுவலகங்களில் ஊழியர்கள் வேலை செய்யமாட்டார்கள் என்றும், சி.ஐ.டி.யூ மகாராஷ்டிர மாநிலக் குழுத் தலைவர் எஸ். ஒய். கோல்காட்கார் அறிவித்தார்.

பம்பாய் நகரத்தில் மட்டும் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் 10 லட்சம் தொழிலாளர்கள் "பந்த்" தில் கலந்து கொண்டுள்ளனர்.

செவ்வாய்க் கிழமை இரவில் வேலை முடிந்து வீட்டுக்குச் செல்வோர் கூட நடந்து செல்ல வேண்டியிருந்தது. "பந்த்" நாளான புதனன்று தெருக்களில் தலைச்சுமையாகக் கொண்டு வந்து விற்பவர்கள் கூட காணப்படவில்லை. பால் சப்ளையும் நின்றது.

மருத்துவமனை வண்டிகளுக்கு மட்டும் விலக்களிக்கப்பட்டிருந்தது.

மகாராஷ்டிர "பந்த்" முழுமையாக நடைபெற்றிருப்பதாக யூ. என் ஐ. செய்தி கூறியது.

மகாராஷ்டிர "பந்த்" பற்றிய செய்திகளை வானொலி வேண்டுமென்றே இருட்டடிப்பு செய்தது.

### டெல்லியில் டாக்சி டிரைவர்கள் ஸ்டிரைக்

## பிரதமர் வீட்டைநோக்கி சென்ற ஊர்வலத்தை போலீஸ் தடுத்தது

புதுடெல்லி, ஜன. 2—

பெட்ரோல் விலை அநியாயமாக உயர்த்தப் பட்டதால் பாதிப்புக்குள்ளான டாக்சி டிரைவர்கள் நேற்று (செவ்வாய்) வேலைநிறுத்தம்செய்து பிரதமர் இந்திரா வீட்டை நோக்கி பெரும் ஊர்வலம் ஒன்றை நடத்தினர்.

பெட்ரோல்விலைஉயர்வை எதிர்த்து வேலை நிறுத்தம் செய்யும் அகிலஇந்திய டாக்சிக்காரார்கள் சங்கம் விடுத்த அறைகூவலுக் கேற்ப இந்த வேலைநிறுத்தம் நடந்தது;

உத்திரப் பிரதேசம், அரியாஞ, பஞ்சாப், ராஜஸ்தான் ஆகிய இடங்களிலுள்ள டாக்சி டிரைவர்களும்வேலை நிறுத்தம் செய்து, டெல்லி ஆர்ப்பாட்டத்தில் வந்து

(4-ம் பக்கம் பார்க்க)

## உ. பி. காங்கிரஸ் ஆபீஸ் கதவை தலையால் இடிக்கிருர்கள் வலது கம்யூனிஸ்டுகள்

லக்னோ, ஜன. 4—

உத்தரப்பிரதேச சட்ட மன்றத்துக்கு தேர்தல் நடக்கப் போகிறது. இச் சட்டமன்றத்துக்கு 425 உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும்.

ஆளும் காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள், இந்த 425 சீட்டுகளுக்கு 6000 பேர் மனுக் கொடுத்திருக்கிருர்கள். இதனுல் ஆளும் காங்கிரசின் அட்ஹாக்கமிட்டியினர் யாரை விடுவது யாரைத் தொடுவது என்று தெரியாமல் தலைவலி மாத்திரைகளை விழுங்கிக் கொண்டிருக்கிருர்கள்.

### சீட்டுகள் 425 6000பேர் போட்டி

இந்த நிலையில், வலது கம்யூனிஸ்ட் கட்சியும் ஆளும் காங்கிரசுடன் கூட்டுச் சேர படாதபாடு பட்டு வருகிறது.

425 சீட்டுகளுக்கு 6000 காங்கிரஸ்காரர்கள் மனுப்போட்டுள்ள நிலைமையில் செய்வதென்ன வென்று தெரியாமல் திணறிக்கொண்டிருக்கும் காங்கிரஸ் தலைவர்கள் இந்த வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு விட்டுக்கொடுக்க எந்த இடங்கள் மிச்சமிருக்கப் போகிறது?— என்று உதட்டைவிடப் பிதுக்குகிருர்கள். மனுப் போட்டுள்ள 6000 காங்கிரஸ்காரர்களும், இந்த வலது கம்யூனிஸ்டுகளுடன் எவ்வித சங்காத்தமும் வைத்துக் கொள்ளக் கூடாது என்று ஆத்திரமுடன் கூறுகிருர்கள்.

### வலது பாச்சா பலிக்கவில்லை

என்றுலும் எப்படி கூட்டு சேர்ந்துவிட வேண்டுமென்று துடித்துக் கொண்டிருக்கும் வலது கம்யூனிஸ்டுகள் காங்கிரஸ் கட்சி அலுவலக வாசற்படிகள் தேய, எத்தனையோ தடவை நடந்து விட்டார்கள், காங்கிரஸ் ஆபீஸ் திண்ணையிலும் படுத்துக் குறட்டை விட்டும் பார்த்து விட்டார்கள். ஒன்றும் பலிப்பதாகத் தெரியவில்லை.

இதனுல் ஆத்திரமுற்ற வலது கம்யூனிஸ்டுகள் 245 தொகுதிகளிலும் எங்களுக்கே செல்வாக்கு கொடி கட்டிப் பறக்கிறது என்று சொல்லி, கண்ட கண்ட இடமெல்லாம் வேட்பாளர்களை நிற்க வைத்திருக்கிருர்கள்.

இப்படி மாஞவாரியாக நிறுத்திவைத்திருப்பதல்ல — ஓட்டுப் பிளவுப்பட்டு, காங்கிரஸ் வெற்றிக்கு ஆபத்து ஏற்படுமென்றும்—அதனுல், உத்தரப்பிரதேசஷ் காங்கிரஸ் தலைவர்பைஜ்நாதகுரீல் வழிக்கு வருவாரென்றும் வலது கம்யூனிஸ்டுகள் கருதுகிருர்கள்.

### குரீல் மறுப்பு

ஆனுல் குரீலோ, அந்த வித்தையெல்லாம் இங்கே பலிக்காது. ஏதாவது ஒன்றிரண்டு இடங்களை வலது கம்யூனிஸ்டுகளுக்கு ஒதுக்கி அட்ஜஸ்ட் பண்ணலாமென்று பார்த்தோம். ஆனுல் வலது கம்யூனிஸ்டு கட்சியோ, தமது வேட்பாளர் பட்டியலை வெளியிட்டு விட்டது. இனிமேல் அவர்களுடன் ஒட்டுமில்லை, உறவுமில்லை —அட்ஜஸ்ட்மெண்ட் என்ற பேச்சுமில்லை"— என்று கூறி விட்டார்.

### கதவைத் தட்டுகிருர்கள்

இப்படி காங்கிரஸ் ஆபீஸ் கதவு' ஒட்டக்கூத்தன் பாட்டுக்கு ரெட்டைத் தாழ்ப்பாள் என்ற முறையில் தாளிட்டுப் பூட்டப்பட்டு விட்டாலும், வலது கம்யூனிஸ்டு தலைவர்கள் தமது போக்கில் போகவில்லை.

காங்கிரஸ் ஆபீஸ் கதவை தினம் நாலு தடவை தட்டிக் கொண்டுதான் இருக்கிருர்கள்.

### ஜனவரி 10-ம் தேதி

# குமரி மாவட்டமெங்கும் ஆர்ப்பாட்டம்

## அரசு போக்குவரத்து தொழிலாளர் கோரிக்கைகளை நிறைவேற்றுக

நாகர் காவில். ஜன. 3—

குமரி மாவட்டத்தில் அரசுப் போக்குவரத்துத் தொழிலாளர்கள் நடத்தும் வேலை நிறுத்தம் 78 வது நாளாக நீடிக்கிறது. எந்த உடன்பாடுக்கும் தயாராகாத நிர்வாகத்தையும் தமிழக அரசையும் கண்டித்து ஜனவரி 10-ம் தேதி குமரி மாவட்டத்திலுள்ள அனைத்து கிராமங்களிலும் ஆர்ப்பாட்டங்களும், ஊர்வலங்களும்நடைபெறவிருக்கிறது.

குமரி மாவட்டத்திலுள்ள 225 போக்குவரத் தொழிலாளர்கள் மீது நாகர்கோவில், குழித்துறை மாஜிஸ்டிரேட் கோர்ட்டுகளில் கிரிமினல் வழக்குகள் தொடரப்பட்டுள்ளன. மேலும் நூற்றுக் கணக்கானேர் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர். சுமார் 100 தற்காலிகதொழிலாளர்கள் டிஸ்மிஸ் செய்யப்பட்டுள்ளனர்.

போக்குவரத்துத் தொழிலாளர்கள் கோரிக்கைகளை நிறைவேற்றக் கோரியும், 6—11—73 அன்று லேபர் ஆபீசர் முன்னிலையில் நடைபெற்ற சமரசப் பேச்சுவார்த்தை முறிந்ததுபற்றிய அறிக்கை அரசுக்கு சமர்ப்பிக்கப்பட்ட பிறகும் அரசு எந்த நடவடிக்கையையும் எடுக்காததைக்கண்டித்தும், அந்த அறிக்கையை வைத்து பேசி முடிக்கவோ அல்லது அஷஜூடிக்கேட்னுக்கு விட்டுவிடவோ வலியுறுத்தியும், வழக்குகளை வாபஸ் பெற்று அனைத்து ஊழியர்களையும், வேலையும் திருப்பிச் சேர்த்துக்கொள்ளக்கோரியும் வருகிற 10-ம் தேதி தமிழகமெங்கும சி. ஐ. டி. யூ. 2-வது மாநில மாநாடு விடுத்த அறைகூவலின்படி நடக்கவிருக்கும் ஆதரவு தினத்தையொட்டியே குமரி மாவட்டத்தில் கிராமங்களில் ஆர்ப்பாட்டங்களும், ஊர்வலங்களும் நடத்தப்படுகின்றன.

### பொதுக்கூட்டங்கள்

போக்குவரத்துத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தை உடன்பாட்டுக்குக்கொண்டு வர வலியுறுத்தியும், அரசு ரேஷன் அரிசியின் விலையை உயர்த்தியுள்ளதை கண்டித்தும், கச்சா முந்திரி கிடைக்காததால் 175க்கும் அதிகமானமுந்திரி பருப்புதொழிற்சாலைகள் மூடப்பட்டு தொழிலாளர்கள் நடுத்தெருவில் விடப்பட்டிருப்பதைக் கண்டித்தும் குமரி மாவட்டத்தில் ஜனவரி 10-ம் தேதியிலிருந்து 20 பொதுக் கூட்டங்கள் நடத்த மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட கட்சியின் குமரி மாவட்ட செயற்குழு முடிவெடுத்துள்ளது.

### கருங்காலி வேலை

போக்குவரத்துத் தொழிலாளர் போராட்டத்தை உடைப்பதில் சிண்டிகேட் கட்சி மிகயோசமானமுறையில் செயல்படுகிறது. போக்குவரத்துத் துறை நிர்வாகிகளுடனும், தி. மு. க. தொழிற்சங்கத் தலைவர்களுடனும், சிண்டிகேட் தலைவர்களும் சேர்ந்து போராட்டத்தை உடைப்பதற்கான ஒத்துழைப்பைக் கொடுக்கின்றனர்.

மலையோரப் பகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிண்டி எம். எல். ஏ. பகிரங்கமாக காசு வாங்கி கருங்காலிகளை வேலையில் சேர்க்கிருர் என்று மாவட்டமெங்கும் பேசப்படுகிறது.

### காமராஜர் மவுனம்

குமரி மாவட்ட எம். பி. யான காமராஜர் போக்குவரத்துத்தொழிலாளர் போராட்டம் இவ்வளவு நாளாக நடைபெற்றபின்னரும் வாய் திறக்கவேயில்லை.

காமராஜர் டிசம்பர் முதல் வாரத்தில் குமரி மாவட்டம் வந்திருந்தபோது தொழிலாளர்கள் எம்.பி.என்ற முறையில் அவரிடம் போராட்டம் பற்றி எடுத்துச் சொல்லி உடன்பாட்டுக்கான ஏற்பாடுகளை செய்ய வேண்டிக் கொண்டனர். தொழிலாளர் போராட்டத்தை காலங்கடத்தி ஒடுக்கும் கருணநிதியின் செயலைக் கண்டித்து அறிக்கைவிடுமாறும் கேட்டுக்கொண்டனர். இருப்பினும் அவர் இதுவரையிலும் அதற்கான எந்த முயற்சியையும் மேற்கொள்ளவில்லை.

தங்களது மாவட்டத்தில் கருணநிதி அரசின் தொழிலாளி விரோதப்போக்குக்கு ஆதரவாகச் செயல்படும் சிண்டிகேட் எம். பி, எம். எல். ஏ.க்களின் செயலைக்கண்டு குமரி மாவட்ட மக்கள் வெறுப்பு அடைந்துள்ளனர்.

### சம்பாதிப்பு

கருங்காலிகளை வேலைக்கு சேர்த்து சம்பாதித்த பணத்தைகொண்டு நாகர்கோவிலுள்ளஒரு தி மு க தொழிற்சங்கப் பிரமுகர் கேரள

(4-ம் பத்தி பார்க்க)

## லஞ்சம் வாங்கிய மாஜிஸ்திரேட்டுக்கு கடுங் காவல்

நாகபுரி, ஜன. 2—

மத்திய பிரதேச மாநில நாகபுரியைச் சேர்ந்த ஒரு முதல்வகுப்பு மாஜிஸ்திரேட்டுக்கு 2 ஆண்டு கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டுள்ளது.

தமக்குமுன்விசாரணைக்கு வந்த குற்ற வழக்குஒன்றில் எதிரியிடமிருந்து ஒரு போலீஸ்காரர் மூலம் லஞ்சமவாங்கியதால் அவருக்கு இந்த 2 ஆண்டு கடுங்காவல் தண்டனையை விஷேச நீதிபதி விதித்தார்.

## கூட்டுறவு மில் தொழிற் சங்கப் பிரதிநிதிகள் கூட்டம்

அன்புமிக்க தோழர்களே!

தமிழகத்தில் கூட்டுறவுப் பஞ்சாலைகளில் செயல்படும் சிஐடியூ சங்கங்களின் பிரதிநிதிகள் கூட்டம் ஒன்று இம மாதம் (1974 ஜனவரி) 8, 9, தேதிகளில் மதுரையில் நடைபெறும். பலவேறு ஆலைகளில் நிலவும் வேலை பளு, சம்பள விகிதங்கள, வேலை நிலமைகள் பற்றிய விபரங்களை பரிசீலித்து, பொதுவான கோரிக்கைகளை உருவாக்கி, அவற்றிற்கான இயக்கத்துக்கும் திட்டமிட இக்கூட்டம கூட்டப்படுகிறது. எனவே ஒவ்வொரு சி ஐ டி யூ சங்கமும் 2 பிரதிநிதிகளுக்குக் குறையாமல் அனுப்பி வைபபதோடு, முடிந்த அளவு விபரங்களையும, சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளையும், அனுப்பி வைக்கும்படி வேண்டிக் கொள்கிறேன். 19, பூக்காரச் சந்து முகவரிக்கு வந்து சேரவும்.

மதுரை
2—1—74

தோழமையுள்ள
ஏ. நல்லசிவன்,
செயலாளர்.
சி.ஐ.டி.யூ. தமிழ் மாநிலக்குழு.

தீக்கதிர்

# விலைவாசி உயர்வை எதிர்த்து மக்கள் போராட்டம்

சென்ற வருடத்தைப் போல் இந்த வருடத்திலும் விலை ஏற்றம் பயங்கரமானதாக உள்ளது. கடந்த டிசம்பர் 8ம் தேதிவரை மொத்த விலைக் குறியீட்டெண் 259·1 புள்ளியாக உயர்ந்துள்ளது.

இது ஒரு வருடத்துக்கு முன் இருந்ததைவிட 22·4 சத விகிதம் அதிகமாகும்.

அறுவடை மாதங்களில் விலைகள் இறங்குவதுகூட இந்த ஆண்டில் நிகழவில்லை.

1972 செப்டம்பர் மாதத்தைவிட 1973 செப்டம்பர் மாதத்தில் உபயோகிப்போர் விலைக் குறியீட்டெண் 18 சத விகிதம் கூடியுள்ளது. செப்டம்பருக்கு பிறகும் மொத்த விலைகள் குறையாததிலிருந்து மக்கள் சுமையைத் தணிக்க அரசு எந்த உறுதியான நடவடிக்கையும் எடுக்கவில்லை என்பது புலனாகிறது.

விலைவாசி உயர்வைத் தடுக்க அரசு தவறியதின் விளைவென்ன? நாடு முழுவதும் போராட்டங்கள் உருவாகிக் கொண்டிருக்கின்றன.

பம்பாயில் டிசம்பர் 30-ம் தேதியிலிருந்து ஊதிய உயர்வு கோரி 2 லட்சம் பஞ்சாலைத் தொழிலாளர்கள் காலவரையற்ற வேலைநிறுத்தம் தொடங்கியுள்ளனர்.

ஜனவரி 2ம் தேதியன்று மகாராஷ்டிர மாநிலம் முழுவதும் "பந்த்" நடைபெற்றுள்ளது. மற்றும் எல் ஐ சி ஊழியர் போராட்டம், ரயில்வே தொழிலாளர் போராட்டம், சணல் ஆலைத் தொழிலாளர் போராட்டம், எஞ்ஜினியரிங் தொழிலாளர் போராட்டம் போன்ற போராட்டங்கள் நாடு முழுவதும் தோன்றியுள்ளன. புதிய வருடத்தின் முதல் மாதமே போராட்டங்கள் நிறைந்த மாதமாகப் பிறந்துள்ளது.

ஒரு பக்கம் விலைவாசி உயர்வை கட்டுபடுத்தத தவறிவிட்டு இந்த நெருக்கடி நேரத்தில் வேலை நிறுத்த உரிமையை நிறுத்திவைக்க வேண்டும் என்று பிரதமர் இந்திரா அறிவித்துள்ளார்.

விலைவாசி உயர்வைத் தடுப்பதற்கு உறுதியான நடவடிக்கை எடுக்க இந்திரா அரசு முன் வரவில்லை.

உற்பத்தியைப் பெருக்குவதுதான் பொருட்கள் தட்டுப்பாட்டைத் தவிர்ப்பதற்கான வழி என்று டிசம்பர் 31-ம தேதி பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசும் போது பிரதமர் இந்திரா யோசனை கூறியுள்ளார்.

பெரு நிலச்சுவான்தாரிடம் இருக்கும் உபரி தானியம் முழுவதையும் அரசாங்கமே கொள்முதல் செய்யவோ மற்ற பொருள்களையும் கன்டரோல் விலையில் மக்களுக்குக் கிடைக்கச் செய்யவோ அரசு நடவடிக்கை எடுக்கவில்லை.

பிரதமர் இந்திரா கூறுகிறபடி உற்பத்தி பெருகினால் மட்டும் மக்களுக்கு நியாயவிலைகளில் பொருள்கள் கிடைக்குமா?

இந்திரா அரசிடமிருந்து மக்களுக்கு எந்த நிவாரணத்தையும் எதிர்பார்ப்பது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளும் நடவடிக்கையாகும்.

இந்திரா அரசு புரிந்து கொள்ளக்கூடிய மொழி போராட்டம் ஒன்றேயாகும்.

விலைவாசி உயர்வையும் இந்திரா அரசின் மக்கள் விரோத கொள்கைகளையும் எதிர்த்து நடைபெறும் வெகுஜனப் போராட்டங்களில் ஒற்றுமையை உருவாக்குவது ஜனநாயகக் கட்சிகள் முன்னுள்ள தலையாய கடமையாகும்.

மேற்கு வங்க பந்தை தொடர்ந்து மகாராஷ்டிர பந்தும் தோன்றியிருப்பது நாட்டு மக்களுடைய விழிப்புணர்ச்சியைப் பிரதிபலிக்கிறது. போராடும் மக்களுக்கு வழிகாட்டும் பொறுப்பை ஏற்க முன்வர வேண்டும் என்று எல்லா ஜனநாயக சக்திகளையும் அறைகூவி அழைக்கிறோம்.

## வேலையில்லா டாக்டர்களுக்கு வேலைதர அரசுக்கு வற்புறுத்தல்

### டீன் வரவேற்பு விழாவில் பயிற்சி டாக்டர்கள் கோரிக்கை

மதுரை, ஜன. 2—

வேலையில்லாத டாக்டர்களுக்கு அரசு வேலை கொடுக்க வேண்டும் என்று இங்குள்ள அரசு மருத்துவ மனையில் நடந்த விழாவொன்றில் பயிற்சி டாக்டர்கள் வற்புறுத்தினர்.

ஹவுஸ் சர்ஜன்கள் [பயிற்சி டாக்டர்கள்] சங்க சார்பில், எர்ஸ்கின் அரசு [பெரிய] மருத்துவ மனை புது அதிகாரியாக [டீன்] பதவி ஏற்றுள்ள டாக்டர் பி. வேணுகோபாலுக்கு வரவேற்பு விழாவும், பதவி உயர்வு பெற்றுச் செல்லும் டாக்டர் காமேஸ்வரனுக்கும் மற்றும் ஹவுஸ் சர்ஜன் பயிற்சி முடித்துச் செல்லும் டாக்டர்களுக்கு பிரிவுபசார விழாவும் நேற்று [செவ்வாய்] நடந்தது. டாக்டர் டி. சுப்ரமண்யம் தலைமை வகித்தார்.

ஹவுஸ் சர்ஜன் சங்க துணைச் செயலாளர் டாக்டர் ஏ. ஹவுஸ்கான் வரவேற்புரை நிகழ்த்திப் பேசும்போது, 'வேலை வாய்ப்பு அடிப்படை உரிமை என்று சட்டமாக்க வேண்டும்' என்ற கருத்தை வற்புறுத்தினர்.

டாக்டர் வேணுகோபாலும், காமேஸ்வரனும் நன்றி தெரிவித்துப் பேசினர்.

விழா இறுதியில், தமிழ்நாடு பயிற்சி மருத்துவர் சங்கப் பொதுச் செயலாளரும், எர்ஸ்கின் ஆஸ்பத்திரி ஹவுஸ் சர்ஜன்கள் சங்கச் செயலாளருமான டாக்டர் கே. சங்கரன் அனைவருக்கும் நன்றி தெரிவித்துப் பேசினர்.

அவர் பேசும்போது, இன்றைய தினம் ஏராளமான டாக்டர்கள் வேலையில்லாது தவிக்கின்றனர் என்றும், சென்னையில் இரண்டு டாக்டர்கள் வேலைவாய்ப்பு அலுவலகத்திற்குச் சென்று பதிந்துள்ளனர் என்றும், அரசினர் இப்பிரச்னையில் தலையிட்டு வேலையில்லாத டாக்டர்கள் அனைவருக்கும் வேலைவாய்ப்பை உடனே ஏற்படுத்தித்தர வேண்டும் என்றும் வற்புறுத்தினர்.

## நெல்லையில் அரசு பஸ் நிலைய இடம் வாங்குவதில்

# லட்சக் கணக்கில் ஊழல்

## தோழர் பாலவிநாயகம் அறிக்கை

திருநெல்வேலி, ஜன 2—

அரசு பஸ்போக்குவரத்து பஸ்கள் தங்குவதற்கும் ஓர்க்ஷாப் கட்டுவதற்கும் நெல்லை வண்ணாரப் பேட்டையில் இடம் வாங்கியுள்ளதில் பெரும் ஊழல் நடந்திருப்பதாகக் கூறப்படுகிறது. இது குறித்து:—

நெல்லை மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளரும், பாளை. நகர் மன்ற உறுப்பினருமான தோழர் சு. பாலவிநாயகம் அறிப்பதாவது:—

அரசு பஸ் போக்குவரத்து பஸ்கள் தங்குவதற்காகவும், பழுது பார்க்கும் வேலைகளை நடத்துவதற்கு ஓர்க்ஷாப் கட்டுவதற்கும் வண்ணார் பேட்டையில் சுற்றுலா மாளிகைக்குப் பக்கத்தில் சுமார் 3½ ஏக்கர் நிலம் வாங்கி ஓர்க்ஷாப் கட்டும் வேலைகள் நடந்து வருகின்றன.

இந்த இடத்தை வாங்குவதற்கு அரசுப் பணத்தில் பல லட்சம் ரூபாய் கொடுக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இந்த இடம் அவ்வளவு விலை பெறாது. இந்த இடத்தில் செண்டுக்கு ரூ 400-க்கு மேல் விலை கிடையாது. அப்படி இருக்க பல லட்சம் ரூபாய் மக்கள் வரிப்பணத்தைக் கொடுத்து இந்த இடத்தை வாங்கியது பலமாக கண்டிக்கத் தக்கதாகும்.

இந்த இடத்தை வாங்கியதில் பெரிய ஊழல் நடந்திருப்பதாக பொது மக்கள் கருதுகிறார்கள். ஒரு அரசியல் பிரமுகர் கணிசமான தொகையை ஆதாயமாகப் பெற்றுக் கொண்டு இந்த இடத்தை அரசு பஸ் போக்குவரத்துக்கு வாங்கிக் கொடுத்ததாக பரவலாகப் பேசப் படுகிறது.

### சர்வகட்சி விசாரணைக் குழு

எனவே, இந்த இடம் வாங்கப்பட்ட விதம் குறித்தும்—இந்த இடத்தை வாங்குவதற்கு நிலச் சொந்தக்காரருக்குக் கொடுக்கப்பட்ட தொகை நியாயமானதா அல்லது அநியாயமானதா என்பது குறித்தும்—ஒரு சர்வ கட்சி குழு அமைத்து விசாரணை செய்து உண்மையான விவரங்களை பொது மக்களுக்கு தெரியப்படுத்த, போக்குவரத்துத் துறை அமைச்சருக்கும், ஆளும் கட்சிக்கும் தார்மீகப் பொறுப்பு உண்டு என்று வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

பொது மக்களின் வரிப் பணத்தை டம்பாச்சாரித்தனமாகச் செலவு செய்ய நெல்லை — பாளை பொதுமக்கள் அனுமதிக் கூடாதென்றும், இந்த நிலம் வாங்கப்பட்ட விதம் பற்றி உண்மையான விவரங்கள் பகிரங்கமாகத் தெரிவிக்கப்படும் வரையிலும், பொது மக்களும சகல ஜனநாயக அரசியல் கட்சிகளும் ஓய்ந்திருக்கக் கூடாது என்றும் வேண்டிக் கொள்கிறேன்.

### பொருத்தமான இடமல்ல

இரண்டாவதாக, பஸ்கள் தங்குமிடத்திற்கு இப்போது வாங்கப்பட்டுள்ள இடம் கொஞ்சமும் பொறுத்தமானதல்ல. இதே விலைக்கு நாகர்கோவில் ரோட்டிலோ அல்லது திருச்செந்தூர் ரோட்டிலேயோ வேறு இடம் வாங்கியிருந்தால் அதிகமான இடம் வாங்கியிருக்க முடியும்.

மூன்றாவதாக இந்த இடத்தில் அரசு பஸ் போக்குவரத்து ஓர்க்ஷாப் கட்டுவதற்கு பல காரணங்களைக் கூறி ஆட்சேபனைக் கடிதங்கள் தினசரிப் பத்திரிகைகளில் வந்துள்ளன.

### மக்களின் ஆரோக்கியத்துக்கு பாதிப்பு

குறிப்பாக, ஓர்க்ஷாப்பிலுள்ள கழிவு நீர், எண்ணை பொருட்கள் தாமிரபரணி ஆற்றில் போய்ச் சேர்ந்து, ஆற்று நீர் பாழாகி வண்ணார்பேட்டைபொது மக்கள் மற்றும்அதற்கு கீழ் பகுதியிலுள்ள ஊர்களிலுள்ள பொதுமக்களின் ஆரோக்கியம் பாதிக்கப்படும் என்று அஞ்சுகிறேன்.

தாமிரபரணி ஆற்று நீரை குளிப்பதற்கும், குடிப்பதற்கும், பயன்படுத்தும் மக்களுக்கு இதனால் நோய் நொடிகள் ஏற்பட ஏதுவுண்டு. மோட்டார், ஓர்க்ஷாப்பிலுள்ள கழிவுநீர் எண்ணை போன்றவை. தாமிரபரணி ஆற்று நீரில் கலப்பதால் வண்ணார் பேட்டையில் சலவை செய்யப்படும் துணிகள் பாதிக்கப்படும்.

எனவே இந்த இடத்தில் அரசு பஸ் ஓர்க்ஷாப் வைப்பதையும் ஓர்க்ஷாப்பின் கழிவு நீர்—எண்ணை பொருட்களை தாமிரவரணி ஆற்றில் கலக்கச் செய்ய விருப்பதையும் தடுக்க மக்களின்நல்வாழ்வில் அக்கறை கொண்டவர்களும் ஜனநாயக அரசியல் வாதிகளும் தங்களுடைய சக்தி வாய்ந்த கண்டனக் குரலை எழுப்ப வேண்டும்.

தற்போதுள்ள, இடத்தில் ஓர்க்ஷாப் வருவதை பலமாக ஆட்சேபிக்க வேண்டும் என்று பணிவன்புடன் வேண்டிக் கொள்கிறேன்.

## டெல்லி ஆஸ்பத்திரியில வேலைநிறுத்தம்

புதுடெல்லி, ஜன 2—

புதுடெல்லியி உள்ள 5 அரசாங்க ஆஸ்பத்திரிகளில் வேலை செய்யும் 2400 ஜூனியர் டாக்டர்கள் காலவரையற்ற வேலைநிறுத்தம் செய்துள்ளார்கள்.

பொருத்தமான ஒப்புக் கொள்ளக்கூடிய ஊதிய விகிதமும், வாழ்வதற்கும் வேலை செய்வதற்குமான வசதிகளும் கோரி இவ்வேலை நிறுத்தம் நடக்கிறது. டாக்டர்கள், பதிவாளர்கள், பயிற்சி டாக்டர்கள் ஆகிய அனைவரும் இவ்வேலை நிறுத்தத்தில் குதித்துள்ளனர்.

## பதுக்கல்காரர்களுக்கு இந்திரா வக்காலத்து

புதுடில்லி. டிச. 31—

பொருட்கள் தட்டுப்பாட்டைத் தவிர்ப்பது, சாத்தியமல்ல, சில பொருள்களுக்குத் தேவை அதிகரித்திருப்பதினால் தான் தட்டுப்பாடு நிலைமை உருவாகியுள்ளது என்று இங்கு இன்று பத்திரிகையாளர்கள் கூட்டத்தில் பேசிய பிரதமர் இந்திரா கூறினார்.

## பல நகர்களில்

# எல்.ஐ.ஸி. ஊழியர்கள் சஸ்பெண்ட்

## நிர்வாகத்தின் பழிவாங்கும் நடவடிக்கை தொடருகிறது

பம்பாய், ஜன. 1—

நியாயமான கோரிக்கைகளுக்காகப் போராடும் ஆயுள் காப்பீட்டுக் கழக (எல். ஐ. ஸி) ஊழியர்கள் மீது அக்கிரமமாக பழிவாங்கும் நடவடிக்கையை நிர்வாகம் மேற்கொண்டுள்ளது. சென்னை, பம்பாய், நாகபுரி ஆமதாபாத், பெங்களூர் ஆகிய இடங்களில் ஊழியர்கள் "சஸ்பெண்ட்" செய்யப்பட்டனர்.

சென்னையில் 8 ஊழியர்கள், ஆமதாபாத்தில் 2 ஊழியர்கள், நாகபுரியில் 2 ஊழியர்கள், பெங்களூரில் 2 ஊழியர்கள். பம்பாயில் 8 ஊழியர் மற்ற இடங்களில் 8 பேரும் (நேற்று 1ம் தேதியன்று) சஸ்பெண்ட் செய்யப்பட்டனர்.

ஊதிய முடக்கம் செய்யக் கூடாது- கோரிக்கை சாசனத்தின் மீது தீர்வுவேண்டும் சஸ்பென்ஸன் உத்தரவை வாபஸ்பெறவேண்டும் குறுப்புச் சுற்றறிக்கைகளை வாபஸ் பெறவேண்டும் ஆகிய கோரிக்கைகளுக்காக எல். ஐ. ஸி. ஊழியர்கள் நீண்டநாட்களாகப் போராடிவருகின்றனர்.

1973 டிசம்பர் மாதம் 7 ம் தேதியும் 14 ம் தேதியும், 21ம் தேதியும் அவர்கள் வெளிநடப்புப்போராட்டம் நடத்தினர். ஆயினும் ஊழியர்களது கோரிக்கைகளை ஏற்பதில் நிர்வாகம் அலட்சியம் காட்டியதின் விளைவாக சென்ற டிசம் 28-ம் தேதியன்று, நாடு முழுதும் ஊழியர்கள் அனைவரும் உறுதியுடன் கட்டுப்பாடாகநின்று ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் செய்தனர்.

ஊழியர்களின் பிரச்னைகளை சுமுகமாகத் தீர்ப்பதற்கு மாறாக, அவர்கள்மீது முரட்டுத்தனமான நடவடிக்கையை நிர்வாகம் மேற்கொண்டுள்ளது. இந்தப் பழிவாங்கும் நடவடிக்கையின் மேலும் ஒரு கட்டமாக பல இடங்களில் ஊழியர்கள் தற்காலிக வேலைநீக்கம் செய்யப்பட்டனர்.

நிர்வாகத்தின் பழிவாங்கும் நீசத்தனமான நடவடிக்கையைக்கண்டு அஞ்சாமல் ஊழியர்கள் அனைவரும் கோரிக்கைகளைப் பெற உறுதி பூண்டுள்ளனர்.

## ஆசிரியருக்கு...

### கவிதையில் வடிவப்பிடிவாதம் தேவையற்றது

தோழரே,

ஒரு கவிதை புதுக் கவிதையா பழங் கவிதையா என அறிவதற்கான அளவுகோல் அதன் வடிவமோ வார்த்தைகளோ அல்ல—அது வெளியிடும் கருத்துதான்! இன்ன வடிவத்தில்தான் கவிதை அமைய வேண்டும் என்ற பிடிவாதம் தேவையில்லாதது. அந்தப் பிடிவாதம் எந்தத் தரப்பிலிருந்து வந்தாலும் ஏற்றுக் கொள்ள வேண்டியதில்லை. யாப்பிலக்கணத்தை நொறுக்கிப் போட்டுவிட்ட காலம், யாப்பில்லாத ஒரு 'இலக்கணத்தையும் பிரசவிததே தீரும்.

அந்தப் 'பேறுகாலம் தான்' இன்றைய கவிதையின் காலம். எனவே இலக்கியத்தின் எல்லா வடிவங்களும் அங்கீகரிக்கப் படுவதன் மூலமாகவே அவற்றின் சாரமான பகுதிகள் உறிஞ்சப்பட்டு, மற்றவை மக்களால் நிராகரிக்கப்படுவதற்கு வழிகோல முடியும். 'வர்க்கப் போரின் எல்லா வடிவங்களையும் சிறப்பாகக் கற்றுத் தேர்ந்தவனே மார்க்சிஸ்ட்' என்கிறார், ஸ்டாலின். இலக்கியத்திலும் எல்லா வடிவங்களையும் வெற்றி கொள்ள வேண்டியது மார்க்சிஸ்ட் கடமையாகும்.

இதுவே, பழங்கவிதையாளருக்கும் புதுக்கவிதையாளருக்கும் பதிலுமாகும்!

'யாப்பிலே' அடங்கவில்லை என்று, ஒரு புதுமைக் கருத்தை நிராகரிக்காதீர்கள்!

அதேபோல், 'இது யாப்பிலே பிறந்தது. எனவே தூக்கி எறி' என்று ஒரு புதுமைக் கருத்தைப் பொசுக்கி விடாதீர்கள்!

மொத்தத்தில் இன்றைய தேவை: ஜனநாயகப் புரட்சிக்கான இலக்கியப் படைப்புகள்! இந்த மையத் தேவைக்கு முன்னால் வடிவங்கள் இரண்டாம் பட்சமே!

அன்புள்ள

தணிகைச் செல்வன்



# எந்தக் கட்சியுடனும் தேர்தல் உடன்பாடு செய்யவில்லை

## தோழர் இ.கே. நாயனார் அறிக்கை

மானூர். ஜன. 1—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிகேரளக்காங்கிரசுடன் தேர்தல்பற்றி எந்த உடன்படிக்கையும் செய்து கொள்ளவில்லையென்று கட்சியின் கேரள மாநிலச் செயலாளர் தோழர் இ.கே. நாயனார் அறிவித்துள்ளார்.

இதுகுறித்து தோழர் நாயனார் வெளியிட்டுள்ள அறிக்கை வருமாறு:—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும், கேரள காங்கிரசும் தேர்தல்உடன்படிக்கை செய்துகொண்டதாக வெளியாகியிருக்கும் பத்திரிகைச் செய்திகள் உண்மையல்ல. கேரள காங்கிரசுடனோ. வேறு எந்தக்கட்சியுடனோ, தேர்தல்பற்றி எந்த விதமான பேச்சுவார்த்தையையும் கட்சி இதுவரை நடத்தவில்லை.

கேரளத்தில் ஒரு பொதுத் தேர்தல் சமீப காலத்தில் இல்லாததால் அப்படிப்பட்ட பேச்சு வார்த்தைக்கான தேவையே இல்லை.

"உணவுப் பிரச்சினையிலும், வேறு சில ஜீவாதாரப் பிரச்சினைகளிலும்கேரள சோசலிஸ்ட் கட்சி, சோசலிஸ்ட் கட்சி விவசாயத் தொழிலாளிகட்சி ஆகிய மூன்றும் மார்க்சிஸ்ட்கட்சியும் கேரள காங்கிரசும் கூட்டாகக் கிளர்ச்சிகள் நடத்துகின்றன.

அதே வேளையில் அடிப்படையான பல கொள்கைகளிலும் கேரள காங்கிரசுக்கும், மார்க்சிஸ்ட்கட்சிக்குமிடையே கருத்து வேற்றுமை உண்டு.

அகில இந்திய அளவில் சோசலிஸ்ட் கட்சியுடனும், கேரளத்தில் கேரள சோசலிஸ்ட் கட்சி, விவசாயத் தொழிலாளிகட்சி ஆகிய கட்சிகளுடனும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு கூடுதல் உறவு உண்டு என்ற உண்மையையும் தெரிவித்துக்கொள்கிறேன். இவ்வாறு தோழர் இ. கே. நாயனார் தனது அறிக்கையில் கூறியுள்ளார்.

## வாலிபர் முன்னணி அமைப்புக் கூட்டம்

சென்னிமலை, ஜன. 2—

பெருந்துறை ஏரியா துடுப்பதி பகுதியில்சோஷலிஸ்ட்வாலிபர்முன்னணி கிளை அமைப்புக் கூட்டம் டிச 26-ந் தேதி நடைபெற்றது.

வாலிபர் முன்னணிக்கு கிளைச் செயலாளராக கோவிந்தசாமியும், துணைச் செயலாளராக ரத்தினசாமியும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

கூட்டத்தில் சென்னிமலை கட்சிச் செயலாளர் சி. எஸ். பொன்னுசாமியும், ஜில்லா கமிட்டி உறுப்பினர் காளியண்ணனும் கலந்து கொண்டு பேசினர்.

## உணவுக் கார்ப்பரேஷன் தலைவர் இக்பால் சிங்

# குற்றவாளிக் கூண்டிலே நிற்கிறார்

## எண்ணெய், பருப்பு கொள்முதலில் இடையில் சூறையாடிய லஞ்சம்

புதுடில்லி, ஜன 2—

இந்தியாவில் உணவுத் தானியங்களையும் பயறு, பருப்பு, சமையல் எண்ணெய் ஆகியவைகளையும் கொள்முதல் செய்வதும், சேமித்து வைப்பதும், தேவைப் பட்ட இடங்களுக்கு அனுப்பி வைப்பதுமான வேலைகளை இந்திய உணவுக் கார்ப்பரேஷன் என்ற ஸ்தாபனம் செய்து வருகிறது. இது இந்திய சர்க்காருக்குச் சொந்தமானது.

இவ்வளவு முக்கியமானதும் உயிர் நாடி போன்றதுமான ஸ்தாபனத்துக்கு தலைவராக இக்பால்சிங் என்பவரை அரசாங்கம் நியமித்திருந்தது. இந்த இக்பால்சிங் முன்னாள் மத்திய மந்திரியாகவும் இருந்த ஜெண்டில் மேன் ஆவார்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னே இதன் தலைவராக இருந்த இக்பால்சிங் நடத்தாத கூத்து எதுவுமே இல்லை. கொள்ளையடிப்பதற்குச் சரியான கூடமாக உணவுக் கார்ப்பரேஷனை அவர் மாற்றி விட்டார். கொள்முதலிலே கொள்ளை விநியோகத்திலே கொள்ளை! அனுப்புவதிலே கொள்ளை... இப்படி எல்லாம் கொள்ளையாகவே நடந்தது.

இக்பால்சிங் செய்த எத்தனையோ ஊழல்கள் ஒரு புறமிருக்க—சமீபத்தில் இந்திய அரசின் புலனாய்வுத் துறையினர் அவரை மற்றுமொரு குற்றத்துக்காக, இழுத்து வந்து கூண்டில் ஏற்றியிருக்கிறார்கள்.

உணவுக் கார்ப்பரேஷனுக்கு நட்டம் உண்டாக்கும் முறையில், சின்ன சுகர்வால், பெரிய சுகர்வால் என்ற அண்ணன் தம்பிகளுக்கு, கொள்ளைலாபமடிக்க ஏற்பாடு செய்தார் என்பதும் ஒரு குற்றச்சாட்டு.

### எண்ணையிலும் பயறிலும் ஏகப்பட்ட கொள்ளை

இதை விசாரிக்க ஓ பி. சின்கா என்ற விசேஷ நீதிபதி முன்னால் வழக்கு வந்திருக்கிறது. இக்பால்சிங்கும், கமலபிரசாத்தும், ராதேசியாம் அகர்வாலும் கூண்டிலே நிறுத்தப்பட்டனர்.

பங்களாதேஷ் அகதிகளுக்கு, சமையல் எண்ணெயும் பருப்பு வகைகளும் வாங்குவதில் சதி செய்து ஊழல் நடத்தி கொள்ளையடித்தார்கள் என்பது இந்தக் கனவான்களின் மீதுள்ள குற்றச்சாட்டு.

1972 செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் பங்களாதேஷ் அகதிகள் அதிக எண்ணிக்கையில் வந்த போது அகதிகள் புனர்வாழ்வு மந்திரி, உணவு கார்ப்பரேஷனுக்கு ஓர் ஆர்டர் கொடுத்தார். அதாவது சமையல் எண்ணெய், பருப்பு வகைகள் ஆகிய பொருள்களை ஸ்டாக் செய்து வையுங்கள் என்று கேட்டிருந்தார்.

இதன்படி உத்தரப்பிரதேசம். ராஜஸ்தான, ஹரியானா ஆகிய மாநிலங்களிலிருந்து 1000 மெட்ரிக்டன் சமையல்எண்ணெய்வாங்கஉணவுக்கார்ப்பரேஷன் திட்டமிட்டது.

இதன்படி லக்ஷ்மணபுரியில். 400 டன் எண்ணெய் சப்ளைசெய்யுமாறு அறிவிப்பு செய்யபபட்டது; பலர் டெண்டர் அனுப்பினர். 11 பேர் சப்ளைசெய்ய முன்வந்தார்கள்.

### ஜவுளி வியாபாரிகள் எண்ணையில் விழுந்தனர்

சப்ளை செய்ய முன்வந்தவர்களெல்லாம் டில்லி ஆபீசுக்குப் போகும்படிக் கூறிவிட்டார்கள்.

இந்த நிலையில், இந்த 11 நபர்களில் கமலபிரசாத் என்பவரும், ராதேசியாம் என்பவரும் இருந்தனர். இவர்கள் எண்ணெய் வியாபாரிகள் அல்லர். இவர்கள் ஜவுளி வியாபாரிகள். இவர்கள் டெண்டர் அனுப்பும் போதும் இவர்களது பெயரால் அனுப்பவில்லை.

3 கம்பெனிகளின் பேரால் டெண்டர் அனுப்பினார்கள். அந்த மூன்றில், ஒரு கம்பெனியின் பெயர் சாகர்மல் ராம்நாத் என்பது. அப்படி ஒரு கம்பெனி எந்த ஊரிலும் இல்லை, இப்படி இல்லாத கம்பெனியின் பேரைச் சொல்லி குல்மால் வேலைகளில் ஈடுபட்டனர்.

மற்ற இரு டெண்டர்கள் பிரசாத் அண்டு கம்பெனியும், அன்னபூர்ண பந்தரும் ஆகும். இந்த அன்னபூர்ண பந்தர்ராதேசியாம் சுகர்பால் பெயரில் இருந்தது.

இந்த டெண்டர்களையெல்லாம் பரிசீலித்த தலைமையகமானது, எண்ணெயின் விலை அதிகமாக உள்ளது என்று கூறி, போகச் சொல்லி விட்டு — அடுத்த வாரம் குறைந்த துகைக்கு டெண்டர்கள் கிடைக்கும் என்று எதிர்பார்த்தார்கள்.

இதற்கிடையில், கமலபிரசாத், உணவுக்கார்ப்பரேஷன் தலைவர் இக்பால் சிங்கிடம் தொடர்பும் கொண்டார்.

இக்பால்சிங்கின் அந்தரங்கக் காரியதரிசியைச் சந்தித்து ரூ 32,000 கொடுத்தார் கமல பிரசாத். இந்த நபர், சப்ளைசெய்வதாகக் கூறப்பட்ட எண்ணெயின் விலை. அதிகமாகஇருக்கிறது

(3-ம் பக்கம் பார்க்க)

# சோவியத் உதவி, இந்தியாவை அடிமைப்படுத்துகிறதா?

## தோழர் பி. சுந்தரய்யா பதில் கூறுகிறார்

**இந்திய – சோவியத் நட்புறவு ஒப்பந்தத்தைப் பற்றியும்—வர்த்தக உடன் படிக்கைகளைப் பற்றியும் சோவியத் தலைவர்கள் இந்தியாவுக்கு வந்து பேசிய பேச்சுகளைப் பற்றியும்—மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மத்திய கமிட்டி, தீர்மானம் நிறைவேற்றியது.**

**அந்தத் தீர்மானத்தைக் கண்ட வலது கம்யூனிஸ்ட் கட்சி, நம்மை சோவியத்—எதிர்ப்புக் கட்சியென்று கூறி தாக்கியது.**

**அந்த வலது கம்யூனிஸ்ட் கட்சிக்கு பதில் கொடுக்கும் முறையில், தோழர் எம். பசவபுன்னையா நீண்டதோர் கட்டுரை மூலம் அரிய விளக்கம் அளித்திருந்ததை, —சென்ற வாரம் தீக்கதிரில் தொடர் கட்டுரைகளாக வெளியிட்டோம்.**

**அக்கட்டுரையின் முடிவில், இந்திய—சோவியத் நட்புறவு ஒப்பந்தத்தைப் பற்றி அப்பட்டமான பிற்போக்குக் கட்சிகளான ஜனசங்கமும், சிண்டிகேட் காங்கிரசும் மற்றும் அதி தீவிரவாதிகளும் கூறிய கருத்துகளுக்கு உரிய சமயத்தில் பதில் அளிப்போம் என்று முடித்திருந்தார்.**

**அக்கட்சிகளுக்கு, நமது கட்சியின் பொதுச் செயலாளர் தோழர் பி. சுந்தரய்யா பதில் அளிக்கும் முறையில், "சோவியத் உதவி இந்தியாவை அடிமைப்படுத்துகிறதா?"—என்ற தலைப்பில் ஓர் அரிய கட்டுரை தீட்டியுள்ளார்.**

கட்சியின் ஆங்கில வார ஏடான "பீப்பிள்ஸ் டெமாக்ரசி" 23—12—73ல் வெளிவந்த, அக்கட்டுரையைக் கீழே பிரசுரிக்கிறோம்:—

### ஜனசங்கத்தின் தாக்குதல்

இந்திய—சோவியத் நட்புறவு ஒத்துழைப்பு உடன்பாடுகளை ஜனசங்கம் கடுமையாகத் தாக்கியுள்ளது. "இந்த ஒப்பந்தத்தால் ரஷ்யாவையே சார்ந்து கிடக்கும்படியான நிலைமை இந்தியாவுக்கு அதிகரித்து விட்டது. சார்பு நிலைமை அதிகரிக்கும் தோறும் அந்த அளவுக்கு நமது தேசிய அரசுரிமையானது அரிக்கப்படுகிறது........."—என்று ஜனசங்கத் தலைவர் வாஜ்பாய் தெரிவிக்கிறார்.

அவர் மேலும் பேசுகையில், "சோவியத் திட்ட நிபுணர்கள் இந்தியாவுக்கு வந்து—கிழக்கு ஐரோப்பிய கம்யூனிஸ்டு நாடுகளை இறுகப் பிணைத்துள்ள சோவியத் பொருளாதாரத் திட்டத்தைப் போன்ற ஒரு திட்டத்தில், இந்தியாவையும் இணைத்துப் போட்டு, சோவியத் யூனியனுக்கு மூலப் பொருள்களையும் சாதாரண சரக்குகளையும் ஏற்றுமதி செய்யக் கூடிய பிரதான நாடாக இந்தியாவை ஆக்குவதே, அவர்களின் உள்ளார்ந்த நோக்கமாகும்"—என்றும் கூறியிருக்கிறார்.

மேலும், "இப்படி சோவியத் நாட்டைச் சார்ந்து நிற்கும்படி இறுகப் பிணைப்பதின் மூலம் இந்திய வர்த்தகத்தை பெருமளவில் சோவியத் நாட்டையே பின்பற்றிச் செல்லும்படியாக மாற்றுகிறார்கள். இதனால், காங்கிரஸ் சர்க்கார், தமது சொந்தக் காலில் நிற்கும் தன்னிறைவு நிலையை ரஷ்யாவுக்குக் காவு கொடுக்கிறார்கள்.

பிரதம மந்திரி தனது பதவிக் காலத்தில், நமது நாட்டை ஒரு பெரும் வல்லரசின் முந்தானையிலிருந்து, அவிழ்த்து இன்னொரு பெரும் வல்லரசின் முந்தானையில் முடிச்சுபோட்டு வைக்கிறார். இதனால் உலகில் நெம்புகோலாக இருந்த நமது தேசம், அந்த நிம்பு சக்தியை இழந்து, வார்சா நாடுகளின் 11-வது உறுப்பினராக ஏதோ ஒரு வகையில் ஆகி விட்டதாக, பல நாடுகளும் கருதும் நிலைமை ஏற்பட்டு விட்டது"—என்று வாஜ்பாய் சாடியுள்ளார்.

### ஸ்தாபனக் காங்கிரசின் தாக்குதல்

ஸ்தாபனக் காங்கிரஸ் தலைவர் திரு பாண்டே, பார்லிமெண்டில் பேசுகையில் பின்வருமாறு குறிப்பிட்டார்:

"நாம் ஒரு பெரும் வல்லரசுடன் நம்மை நாமே கட்டிப் போட்டுக் கொண்டிருக்கிறோம். இரு நாடுகளின் அபிவிருத்தித் திட்டங்களையும், ஒன்றாகப் போட்டு குழப்பிட கூட்டுக் கவுன்சில் வைக்க உத்தேசித்துள்ளார்கள். இதன் மூலம், இந்தியாவானது, பொருளாதாரத் துறையில் ரஷ்யாவைச்சார்ந்து இருக்கச் செய்து விடுவதோடு—ரஷ்யாவின் பொருளாதார அமைப்பின் ஒரு பகுதியாகவும் ஆகிவிடும்"—என்று கூறியுள்ளார்.

### சோசலிஸ்ட் கட்சியின் தாக்குதல்

இந்திய சோஷலிஸ்ட் கட்சி, தன்பங்குக்கு, அதுவும் ஒன்றைச் சொல்லி வைத்தது; அதாவது, இந்தியாவானது சோவியத் யூனியன், அமெரிக்கா ஆகிய இரு பெரும் வல்லரசுகளுடனும் நட்புறவு வைத்துக்கொள்ளவேண்டுமென்றும்.இவ்விரண்டில் ஏதாவது ஒன்றின் கைக் கருவியாகிமற்றென்றுக்குஎதிராகப் பயன் படும்படி தன்னை அனுமதித்து விடக் கூடாது என்றும் குறிப்பிட்டிருக்கின்றது.

### சீனத்தின் தாக்குதல்

மக்கள் சீனத்தின் நவசீன செய்தி என்ன சொல்லுகிறது? அபிவிருத்தியடைந்து வரும் நாடுகளுக்கு உதவி அளிக்கும் சோவியத் யூனியனை சீனசெய்தி ஸ்தாபனம் கடுமையாகத் தாக்குகிறது. "சோவியத் திருத்தல்வாதிகளான சமூக ஏகாதிபத்தியம், பொருளாதாரத் துறையில் தங்களை விஸ்தரித்துக் கொள்ளுவதற்காகவும், வெளிநாடுகளைச் சூறையாடுவதற்காகவும், சுரண்டுவதற்காகவுமே, பொருளாதார உதவி என்ற பேரால் உடன்படிக்கைகள் செய்துவருகிறார்கள், என்று தாக்குகிறது.

அது மட்டுமல்ல.இந்த "உதவி"யைப் பெற்ற நாட்டை பொருளாதாரத் துறையில், சுதந்திரமாக விளங்கும் முறையில் ஆதாயம்பெறச் செய்வதற்குப் பதிலாக-சோவியத் திருத்தல்வாத பொருளாதார "உதவி"யைக்கொண்டு, இதரநாடுகளின் பொருளாதாரத்தைச் சூறையாடுவதற்கும், அந்த நாடுகளின் பொருளாதாரஜீவ நாடிகளைக் கட்டுப்படுத்துவதற்குமே பயன்படுத்துகிறார்கள்"—என்று குற்றம் சாட்டுகிறது.

மேலும், "இப்படித்தான் இந்த "உதவி"இருக்கிறதென்பதற்கு, பளிச்செனத்தெரியும் ஓர் உதாரணத்தை காணவேண்டுமானால் இந்தியாவில்சோவியத்தின் பொருளாதார ஊடுருவலைக்காண முடியும். சோவியத்"உதவி"யால் இந்தியாவில் கட்டப்பட்டுள்ளதொழிற்சாலைகளில் இன்று நாம் காண்பது என்ன? இயந்திரம் உற்பத்தி செய்யும் தொழில்களில் 80சதவிகிதத்தைசோவியத்தேதன்கட்டுப்பாட்டின்கீழ் வைத்திருக்கிறது.மின்சாரக் கருவிகளை உற்பத்தி செய்யும் தொழில்களில் 60 சதமானம் சோவியத் கட்டுப்பாட்டின் கீழ் இருக்கிறது. எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிலில் 35 சதமானம் சோவியத் கட்டுப்பாட்டின்கீழ் உள்ளது. இந்தியாவின் மின் சக்தி உற்பத்தியில் 20 சதமானம் சோவியத் கட்டுப்பாட்டில் உள்ளது.

சோவியத் திருத்தல்வாதிகள், தங்களுடைய உதவியைக் கொண்டு நிறைவேற்றப்படும் திட்டவேலைகளுக்கு—தங்களுடைய நாட்டிலிருந்து நிபுணர்கள் என்றும், தொழில் நுட்ப அறிவாளிகள் என்றும் கூட்டி வந்து—முக்கியமான பிரிவுகளாகிய டிசைனிங், உற்பத்தி, தொழில் நுட்பம் போன்ற பிரிவுகளில் அதிகாரிகளாக நியமிக்கிறார்கள். இதனால், உதவி பெறும் நாடானது, எப்பொழுதுமே இவர்களது கட்டுப்பாட்டின் கீழ் பணியாளர்களாகவே இருக்கவேண்டியுள்ளது......

"மற்றும், சோவியத் திருத்தல் வாதிகள் தங்களுடைய தரங்கெட்ட இயந்திரச் சாமான்களையும் இயந்திரக் கருவிகளையும் கொண்டுவந்து திணிப்பதற்கான ஒரு மார்க்கெட்டாகவே, உதவி பெறும் நாடுகளை ஆக்கி விடுகிறார்கள். அதுமட்டுமின்றி, இந்த நாடுகளின் மதிப்புயர்ந்த செல்வாதாரங்களைக் கொள்ளையடிப்பதிலும் தீவிரமாயிருக்கிறார்கள்"...

மேலேகண்ட வாசகங்கள் அனைத்தும் நவசீனச் செய்தியின் வாசகங்களாகும்.

இதே கருத்தை ஆதரிக்கக்கூடிய பிற்போக்கான ஏகபோக முதலாளிகளின் பத்திரிகைகளும், 'மார்ச் ஆப் தி நேஷன்' "பாய்ண்ட் ஆப் வியூ" முதலான சஞ்சிகைகளும வெளியிட்டுக் குதூகலித்தன.

### சோவியத் யூனியனை பற்றி நமது நிலை என்ன?

இந்தியாவுக்கு சோவியத் யூனியன் அளிக்கும் உதவி பற்றி, நமது கட்சியின் நிலை என்ன?

**நாம் சோவியத்யூனியனை ஒரு வல்லமைமிக்க சோசலிஸ்ட் வல்லரசு என்று கருதுகிறோம். அமெரிக்காவைப் போன்ற ஒரு பெரும் வல்லரசு என்று சோவியத் யூனியனை நாம் கருதவில்லை.**

### மக்கள் சீனாவைப் பற்றி

**இதுபோலவே,சீனாவையும் 80 கோடி மக்களைக் கொண்ட—அதாவது சோவியத் யூனியனைப் போல் மூன்று மடங்கு மக்கள் தொகை கொண்டதும்-உலக மக்கள் தொகையில் ஏறக்குறைய கால்பங்கு மக்களைக் கொண்டதுமான ஒரு பெரிய சோசலிஸ்ட் நாடு என்றே நாம் கருதுகிறோம். சீனாவின் பொருளாதார பலமும், இராணுவ பலமும் - சோவியத் யூனியன் அளவுக்கோ அல்லது ஏகாதிபத்திய அமெரிக்கா அளவுக்கோ, எட்டாவிடினும் வெகுவேகமாக வளர்ந்து கொண்டேயிருக்கிறது என்பதே நமது கருத்தாகும்.**

தற்போதைய உலக நிலைமையின் இந்த அடிப்படையானதும், மறுக்க முடியாததுமான யதார்த்த நிலையை முன் வைத்து தான், நமது கட்சி, தனது நிலை பற்றி கருத்தைத் தெரிவித்துள்ளது.

### சோஷலிஸ்ட்முகாம் நன்மை

உலக சோஷலிஸ்ட் முகாம்தோன்றி பலமுற்று வளர்ந்தோங்கி வருவதானது, ஏகாதிபத்திய, முதலாளித்துவ முகாமைப் பலவீனப்படுத்திக் கொண்டிருக்கிறது.

பலமுற்று ஓங்கி வளரும் சோஷலிஸ்ட் முகாமானது, தேச விடுதலைப் போராட்டங்கள் அரசியல் சுதந்திரம் பெறுவதற்கு இயலும்படிச் செய்கின்றது.

இந்த சோஷலிஸ்ட் முகாமானது, புதிதாக சுதந்திரமடைந்த நாடுகளுக்கும் எவ்வளவோ ஒத்தாசைகள் புரிந்திருக்கிறது. புதிதாக சுதந்திரமடைந்த நாடுகள், தத்தம் நாட்டின் பொருளாதாரத்தை இரும்புப் பிடியில் வைத்திருக்கும் அன்னிய ஏகாதிபத்திய ஏகபோகங்களையும், சொந்த நாட்டு ஏகபோகங்களையும், நிலப்பிரபுக்களையும், ஒழித்துக்கட்ட, எந்த அளவு இஷ்டபூர்வமாக முன் வருகின்றனவோ—அந்த அளவுக்கு சிறிய அளவாகவோ அல்லது பெரிய அளவாகவோ தங்களுடைய பொருளாதாரங்களை அபிவிருத்தி செய்து கொள்ள முடியும். சோஷலிஸ்ட் முகாமின் பலத்தினால் தான், இந்த நாடுகளால் இந்த அளவு வளர்ச்சியைச் சாதிக்க முடிந்தது.

— தொடரும்

---

விவசாயத்துறை அபிவிருத்திக்கு

# நில உடைமை முறையை ஒழிக்க வேண்டும்

## தோழர் இ. எம். எஸ். பேச்சு

மானூர், ஜன. 2—

விவசாயத்துறையில் அபிவிருத்தி ஏற்படவேண்டுமென்றால் நில உடைமை முறை ஒழிக்கப்படவேண்டுமென்று இங்கு நடைபெற்ற கேரள மாநில விவசாயிகள் சங்க மாநாடு கருத்தரங்கில் பேசிய தோழர் இ.எம்.எஸ் நம்பூதிரிப்பாட் சுட்டிக்காட்டினார்.

அவர் பேசியதாவது;—

அரிசி கோதுமை ஆகியவற்றின் உற்பத்தியில் இந்தியா முன்னேறியுள்ளது.

எண்ணெய் கொட்டை, பருப்பு வகைகள் ஆகியவற்றின் உற்பத்தியில் சென்ற 26 ஆண்டு காலத்தில் 26 சதவீத அபிவிருத்தி தான் ஏற்பட்டுள்ளது. இவை அரசு அதிகாரியான டாக்டர் சாமிநாதன்தரும். விவரங்கள் ஆகும்.

தண்ணீர் வசதியும் பரப்பளவும் பெருகியதாலும் கிருமி ஒழிப்பு மருந்துகளும் ரசாயன உரங்களும் உபயோகப்படுத்தியதாலும உற்பத்தி பெருகியது,

ஆனால் சேமிப்பு பெருகவில்லையென்று சாமிநாதன் சொல்லியுள்ளார். அதாவது பசுமைப் புரட்சி பற்றி ஆளுங் கட்சிகள் நடத்தும் அரசியல் பிரசங்கங்கள் உண்மையல்ல என்பதைத் தான் சாமிநாதன் கட்டுரை தெளிவுபடுத்துகிறது;

ஒரு காலத்தில் பின்தங்கிய நாடு என்றும், பின்னர் வளர்ச்சியுரு நாடு என்றும், பின்னர் அபிவிருத்தியடையும் நாடு என்றும நமது நாட்டைப் பற்றி சொல்லப் படுகிறது. எவ்வளவுநசிந்து போன கட்டசியாக இருப்பினும் அதற்குள் இருக்கும் ஆளை 'முதலாளி' என்று அழைத்தால் அவருக்கு இதமாக இருக்கும். அதைப் போன்றுதான் மேற்குறிப்பிட்ட பெயர்களைச்சொல்லி இந்தியாவை அழைக்கும் போது நமது ஆட்சியாளர்கள் நிலையும்.

1948—62 கால கட்டத்தில் இந்தியாவில் ஒருஹெக்டார்நிலத்திலிருந்து உற்பத்தியான அரிசி 11 குவிண்டால் ஆகும். 1968-ம் ஆண்டில் அது 16.1 குவிண்டால் ஆக உயர்ந்தது. ஆனால் இதே கால கட்டத்தில் ஸ்பெயினில் 48.6 குண்டாலிலிருந்து 60.4 குவிண்டாலாகவும் அமெரிக்காவில் 25.6 குவிண்டாலிலிருந்து 49.6 குவிண்டாலாகவும் ரஷியாவில் 14.5 குவிண்டாலிலிருந்து 34.1 குவிண்டால் ஆகவும் அரிசி உற்பத்தி உயர்ந்தது. சோவியத் யூனியனிலும் பட்டினி என்று பேசி நடப்பவர்கள் இந்த உண்மையை கவனிக்க வேண்டும்.

நில உடைமை உறவில் அடிப்படை மாற்றம் கொண்டு வரவில்லையென்றால் விவசாயத் துறையில் அபிவிருத்தி என்பது காகிதத்தில்தான் இருக்கும். இந்த மாற்றம் ஏற்படுத்த ஆட்சிபீடத்தால் தான் தான் முடியும் இன்

(5-ம் பத்தி பார்க்க)

---

# உணவுக் கார்ப்பரேஷன்....

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

என்பதினால்தான் திருப்பி அனுப்பப்பட்டார். தலைமையகத்தினால் அப்படியிருக்க அதே நபரிடமிருந்து அதே விலைக்கு சப்ளைபெற அந்த மூன்று கம்பெனிகளுக்கும் அதாவது கமலபிரசாத்துக்கும் ரதேசியாம் அகர்வாலுக்கும் சொந்தமான அந்த மூன்று கம்பெனிகளுக்கும் இக்பால்சிங் அனுமதிஅளித்தார்.

### மேலும் லஞ்சம்

குறைந்த விலைக்கு சப்ளை செய்ய ஏனையவியாபாரிகள் தயாராக இருக்கும்போது, அவர்களையெல்லாம் விரட்டிவிட இக்பால்சிங் ஒரு யோசனைசெய்தார். அதாவது.குறைந்தவிலைக்குசப்ளை செய்ய முன்வந்த சிலருக்கும் அனுமதி கொடுத்தார்.

ஆனால்இன்னொருபோடும் அதே சமயத்தில் போட்டார், அதாவது, 400 டன் போதாது. 1,200 டன் சப்ளை செய்யவேண்டும் என்றும்-அதுவும் ஒரேமாதத்தில் சப்ளைசெய்யவேண்டும் எனவும் திடீர் உத்தரவு போட்டார்.

அவ்வளவுதான்! எல்லா வியாபாரிகளும் ஓடிவிட்டனர். உடனே அகர்வால் சகோதரர்களை இக்பால் தனியாக அழைத்து என்ன நீங்கள் சப்ளைசெய்ய முடியுமா? என்று கேட்டார். அதற்கு அவர்கள், நாங்கள் எண்ணெய் வியாபாரிகளாக இருந்தால் செய்திடுவோம். ஆனால் ஜவுளி வியாபாரிகளாச்சே. அதுவும் ஒரே மாதத்தில் எப்படி முடியும்?" என்று கேட்டனர்.

உடனே, சப்ளை செய்யும் காலக்கெடுவை நீட்டி, இக்பால்சிங் உத்தரவு போட்டார். இதர அதிகாரிகள் ஆட்சேபித்தும், இக்மால்சிங் கேட்கவில்லை.

காலக்கெடுவை நீட்டியதற்காக என்று ஒரு ரூ 30,000(முப்பதாயிரம்) லஞ்சமாக, அகர்வாலிடமிருந்து பெற்றார்.

இவ்வாறு சமையல் எண்ணெயில் மட்டுமே, இந்த இக்பால்சிங் மொத்தம் ரூ 5 லட்சம் அடித்திருக்கிறார் என்று புலனாய்வுத் துறை குற்றம் சாட்டியுள்ளது.

### பருப்பிலும் பல லட்சம்

எண்ணெயில் மட்டுமல்ல. இதே நபர்கள் பருப்பு சப்ளை செய்யவும் முன்வந்தனர். குவிண்டால் பட்டாணிப் பருப்பு ரூ117க்கும் குறைவாக விற்க சம்மதித்தால் வாங்குவதாக கார்ப்பரேஷன் தலைமையகம் கூறியது.

மீண்டும் இந்த கமலபிரசாத்தும், அகர்வால் சகோதரர்களும், ஆபத்பாந்தவன் இக்பால்சிங்கை பார்த்து சரிக்கட்டினர்.

அவர் குவிண்டால்பருப்பு 123 ரூபாய் வரை வாங்கலாம் என்று உத்தரவு போட்டார்.

அவ்வளவுதான் திருட்டுக் கூட்டத்துக்கு ஏகப்பட்ட சந்தோஷம்.

மார்க்கெட்டிலே போய் குவிண்டால் பருப்பு ரூ 108 மேனிக்கு வாங்கி வந்து—கார்ப்பரேஷனுக்குத் ரூ 123 மேனிக்குத் தள்ளி விட்டார்கள். இதிலும் எவ்வளவோ கொள்ளை.

அது மட்டுமல்ல. இந்த இக்பால்சிங் 1965 முதல் போக்குவரத்து உதவி மந்திரியாக இருந்த போது, பம்பாய்த் துறைமுகத்துக்குச் சொந்தமான மூன்று பெரும் கட்டடங்களை வாடகைக்கு விட்டு—இரகசியமாக அந்த வாடகைப் பணத்தை ஏப்பமிட்டு வந்ததாகவும் குற்றம் சாட்டப்பட்டுள்ளது.

வெள்ளை வேட்டிக்காரர்கள், கார் வைத்திருப்பவர்கள் பெரும் பணக்காரர்கள். பெரிய அதிகாரிகள் முதலியோர் ஊழல் செய்யவோர் குற்றங்கள் புரியவோ மாட்டார்கள் என்ற எண்ணம் நீதிபதிகளிடமும் இருக்கிறது.

அப்படிப்பட்ட நீதிகளுக்கும் பதிகளுக்கும் இந்த இக்பால்சிங் அடித்த கொள்ளைகளை சமர்ப்பிக்கிறோம்.

---

சொந்த நாட்டில் வாழ வழியின்றி

# வேலைதேடிச் சென்ற 163 பேர் கடலில் பிணமாய் மிதந்தனர்

பம்பாய், ஜன. 1—

பிறந்த தாய்த்திருநாட்டில் பிழைக்க வழியின்றி கடல் கடந்து சென்ற நூற்றுக் கணக்கானபேர் துபாய் கடல் பகுதியில் பிணமாக மிதந்துள்ளனர்.

துபாயிலிருந்து தங்கம் வெள்ளி முதலிய பொருட்கள் கள்ளக் கடத்தல் செய்யப்பட்டு நம்நாட்டுக்கு கொண்டு வருவதுபற்றி அடிக்கடி செய்திகள் வந்துள்ளன. இதேபோல் ஆட்களையும் கள்ளத்தனமாகக் மேற்கு ஆசிய நாடுகளில் வேலை வாங்கித் தருவதாக ஆசை காட்டி கூட்டிச் செல்லும் ஸ்தாபனம் ஒன்றும் இயங்கி வருகிறதாம்,

பிறந்த நாட்டில் வாழ வழியில்லை. வேலையும் இல்லை. ஒரு வேளை உணவுக்கும் ஏங்கித் தவிக்கவேண்டியிருந்த இளைஞர்கள் எங்காவது வேலை கிடைத்தால் போகலாம் என்று இந்த ஸ்தாபனத்தின் உதவியை நாடுகின்றனர். இப்படி வருபவர்களிடம் ரூ 1000 வாங்கிக்கொண்டு கள்ளத்தனமாகப் படகுகளில் கடத்தப்படுகின்றனர்.

இவ்வாறு சென்ற 315 பேர் துபாய் அரசு அதிகாரிகளிடம் சமீபத்தில்பிடிபட்டனர்.

பிடிபட்டவர்களை ஒருசிறிய யந்திரப் படகில் துபாய் அதிகாரிகள்திரும்பஅனுப்பியுள்ளனர்.

சிறிய படகில் நூற்றுக் கண்க்கானபேர் ஏற்றப்பட்டதால் பாரம்தாங்காமல் படகு ஆடியதையும் அதிலிருந்தவர்கள் அலறியதையும் அதிகாரிகள்பொருட்படுத்தவில்லை.

நடுக் கடலில் படகு செல்லும்போது படகு கவிழ்ந்து 165 பேர் பரிதாபமாகச் செத்தனர்.

அந்தப் பக்கமாக வந்த கப்பல் ஒன்றினால் மீட்கப்பட்ட 152 இந்தியர்களையும் துபாய் அரசு சிறையில அடைத்துள்ளது. இந்தச் சம்பவம் டிசம்பர் 10-ம் தேதி நிகழ்ந்துள்ளது.

இவர்கள்சிறைப்பட்டிருக்கும் செய்தியும் வெளி உலகத்துக்குத் தெரியவில்லை.

துபாயிலுள்ள இந்தியத் தூதரகமும இந்தப்பிரச்சினையில் தலையிடவில்லை. பாஸ்போர்ட் இல்லாமல் வந்தவர்கள் என்ற சட்ட வாதத்தில் ஒளிந்துகொண்டு சொந்த நாட்டைச்சேர்ந்த மக்கள் எத்தகைய அவல நிலைக்குள்ளாகியுளளனர் என்று பார்க்கமறுத்ததுஎந்தஇரக்க உணர்ச்சிக்கும் இந்தியத் தூதரம் இடம் கொடுக்க மறுத்தது.

துபாய் அரசும் இவர்களை மனிதர்களாகப் பார்க்கவில்லை. இர்தியத்தூதரகமும் இவர்களை இந்தியர்களாக அங்கீகரிக்க மறுத்தது.

சிறையில்சிக்கிய ஒருவன் பம்பாய்க்கு ரகசிய முறையில் எழுதிய கடிதத்தின் மூலமே இந்தச் சம்பவம் வெளி உலகுக்குத் தெரிய வந்துள்ளது.

---

(8-ம் பத்தி தொடர்ச்சி)

றைய ஆட்சி அமைப்பால் விவசாயத்துறையில் மாற்றம் ஏற்படுத்த முடியாது.

இன்று பல்வேறு முறைகளில் இன்றைய அரசு ஏற்படுத்தியுள்ள நிதி உதவியும் நவீனபயிரிடும் முறையும் உதவுவது மேல்தட்டு விவசாயிகளுக்குத்தான்.

பெரும்பான்மையினரான சிறுநில விவசாயிகளுக்கு இதனால் எந்தப் பிரயோஜனமுமில்லை,

நில உடைமை உறவின் பிரச்சனைகள் இன்னும் தொடர்கின்றன, விரல் விட்டு எண்ணிவிடக் கூடிய சிலரது கைகளில் பூமி குன்றுகக் குவிந்துள்ளது. இது தான் இன்றைய பிரச்சனை

1971 கணக்கெடுப்பப்படி கேரளத்தில் 81. 8 சதவீத விவசாயிகளுக்கும் 2½ ஏக்கருக்குக்குறைவாகவே நிலமுள்ளது. மொத்த பூமியின் 81 சத வீதம்தான் இவர்களது உரிமையில் உள்ளது.

28 சதவீதத்துக்கும்அதிகமான நிலம் 2. 5 சத வீத நிலப்பிரபுக்களின்கைகளில் உள்ளது.

நிலச்சீர்திருத்தச் சட்டங்களால் அபிவிருத்தி காண முடியவில்லை, மாறாக உழைப்பதற்கு நிலமில்லாததால் ஊரை விட்டே வெளியேறியவர்கள் எண்ணிக்கைதான் ஏராளம்.

இந்தப் பிரச்சனையும் விவசாயத்துறை அபிவிருத்தியும் பரஸ்பரம் இணைந்தவைகளாகும். சோசலிஸ்ட் நாடுகளில் பெரும்பான்மை விவசாயிகளுடையவும் திறமையை உபயோகப்படுத்தி விவசாயம் அபிவிருத்தி செய்யப்படுகிறது.

இங்கோ விவசாய அபிவிருத்தியின் அளவு என்பது சிறுபான்மை நிலப்பிரபுக்களைச் சார்ந்து நிற்கிறது-

இவ்வாறு தோழர் இ.எம்.எஸ்.நம்பூதிரிபாட் சேினர்.

# ரொட்டி மாவு திருடும் கூட்டு களவாணிகள்

திருவனந்தபுரம், ஜன. 4—

வலது கம்யூனிஸ்ட் அச்சுதமேனன் ஆளும் கேரள மாநிலத்தில், வித விதமான ஊழல்கள் நடக்கின்றன.

டில்லி நகரிலே, உணவு கார்ப்பரேஷன் தலைவராக இருந்த இக்பால் சிங், பங்களாதேஷ் அகதிகளுக்காக எண்ணெய், பருப்பு கொள் முதல் செய்ததில் — வியாபாரிகளிடம் லட்சக் கணக்கில் லஞ்சம் வாங்கிக்கொண்டு, மார்க்கெட் விலையைக் காட்டிலும் கூடுதல் விலை கொடுத்து கொள்முதல் செய்து, கோடிக்கணக்கில் அரசாங் கப் பணத்துக்கு வேட்டு வைத்ததைப் பற்றியும்— அந்த இக்பால்சிங்கும், கூட்டுக் களவாணிகளாக இருந்த போலிக் கம்பெனிவியாபாரிகளும் மாட்டிக் கொண்டு குற்றவாளிக் கூண்டிலே நிற்பதைப் பற்றியும், இதே தீக்கதிரில் 3-ம் பக்கத்தில்வெளி யிட்டிருக்கிறோம்.

## ரொட்டி மாவு திருடி

இப்போது இன்னொரு கேஸ் அம்பலத்துக்கு வந்திருக்கிறது. இது டில்லியிலிருந்து அல்ல. திருவனந்தபுரத்திலிருந்து! இது என்ன?

மலப்புரம் மாவட்டம் முன்னாள் சிவில் சப்ளை அதிகாரி சி. கோபாலன் நாயர் என்பவர் இப் போது சஸ்பெண்ட் செய்யப்பட்டிருக்கிறார். இந் தப் புண்ணியவானை யாராவது பார்க்கவேண்டு னாலும், பேசவேண்டுமானாலும், இவர் மூலம் ஒரு காரியம ஆகவேண்டுமானாலும், இவருக்கு கை, வாய், பை எல்லாவற்றிலும் கொட்டவேண்டும். அப்படிப்பட்ட ஜெண்டில்மன் இவர்.

இவர், மஞ்சேரி தாலுகாவில் 97 ரொட்டிக் கிடங்குகளுக்கு மைதா மாவு சப்ளை செய்திருக் கிறார். இருக்கிற கிடங்குகளுக்கெல்லாம் சிறித ளவே சப்ளை செய்துவிட்டு, இல்லாத கிடங்கு களுக்கெல்லாம் டன் டன்னாக அள்ளி விட்டார் நாயர்.

இதனால், ரொட்டி வியாபாரிகள் மத்தியில் ஏகப்பட்ட கூச்சலும், காபுராவும் ஆகிவிட்டதின் பேரில், ஒரு விசாரணையும் வைக்கப்பட்டது.

விசாரணையில் 40 கிடங்குகளுக்கு என்று கொடுத்த மாவு முழுவதும். கிடங்குகளுக்கு அல்ல, ரொட்டித் தயாரிப்பில் ஈடுபடாத, தனக்கு வேண்டிய 40 பக்காத் திருடர்களுக்கு — போலி கம்பெனிகளுக்கு— அந்த கோபாலன் நாயர் சப்ளை செய்திருப்பது அம்பலமாகியது.

மேலும் துளாவி விசாரித்தபோது, கோபாலன் நாயர் மட்டுமின்றி, தாலுகா சப்ளை ஆபீசர், மாவட்ட சப்ளை ஆபீசர் என்ற கீபாலன் நாயர் களும், ரொட்டி உற்பத்தியாளர்களாக நடித்த போலி கம்பெனிகூட்டுக் களவாணிகளும் சேர்ந்து, பெருச்சாளி வேலை செய்திருக்கிறார்கள் என்ற குட்டு வெளிப்பட்டது.

ஆனஸ்ட் ஜெண்டில்மேன்களாக வேஷம் போட்டுத் திரியும் இந்தக் கூட்டுக் களவாணி களெல்லாம், கோர்ட்டிலே வந்து, குற்றவாளிக் கூண்டுக்குள்ளே நிற்கிறார்கள்.

---

### மேற்கு வங்கத்தில்

# 2 லட்சம் தோட்டத் தொழிலாளர் வேலைநிறுத்தம்

## ஜனவரி 14-ல் நடைபெறுகிறது

கல்கத்தா, ஜன. 3—

மேற்கு வங்கத்தில் உள்ள 297 தேயிலைத் தோட்டங் களைச் சேர்ந்த 2 லட்சம் தொழிலாளர்கள் ஜனவரி 14ம் தேதி அடையாள வேலை நிறுத்தம் செய்கிறார் கள்.

சி ஐ டி யூ வுடன் இணைந் துள்ள தோட்டத் தொழி லாளர் சங்கம் உள்ளிட்ட பல சங்கங்களின் இணைப் புக்குழு விடுத்த அறைகூவ லின்படி இந்த வேலை நிறுத் தம் நடைபெறுகிறது.

தேயிலைத் தோட்டங்களை யும், வர்த்தகத்தையும்நாட்டு மையாக்க வேண்டும், மூடப் பட்டிருக்கும் 12 தோட்டங் களை அரசேஎடுத்து 10ஆயி ரம் தொழிலாளர்களுக்கு வேலை கொடுக்க வேண்டும் என்பது போன்ற கோரிக் கைகளைத் தொழிலாளர்கள் முன் வைத்துள்ளனர்.

தோட்ட முதலாளிகள் கொள்ளை லாப ஆசை கார ணமாக தேயிலைத் தொழி லில் நெருக்கடி ஏற்பட்டுள் ளது.

தொழிலாளர்கள் மீது புளுவைச் சுமத்துவதற்கு முதலாளிகள் செய்யும் சதியை எதிர்த்து தோட் டத் தொழிலாளர்கள் வீரா வேசம் கொண்டுள்ளனர்.

---

### குமரி மாவட்டத்திலும்

## முந்திரித் தொழிலுக்கு நெருக்கடி

குழித்துறை. ஜன. 3—

கச்சாமுந்திரிக்கொட்டை தட்டுப்பாட்டினால் குமரி மாவட்டத்திலும் முந்திரித் தொழிலுக்கு நெருக்கடி ஏற் பட்டுள்ளது.

இதனால் பல தொழிற் சாலைகளும் மூடப்பட்டுள் ளன.

குமரி மாவட்டத்தில் 175 முந்திரித் தொழிற்சாலை களில் 50 ஆயிரம் தொழிலா ளர்கள் வேலை செய்கின்ற னர் என்றும் கச்சாமுந்திரிக் கொட்டை தட்டுப்பாடு இவர்களது வாழ்க்கையை தாறுமாருக்கியுள்ளது என்றும், எனவே, தமிழக அரசு உடனடியாக கச்சா முந்திரிக் கொட்டை (Rawnuts) விநியோகிப்ப தற்கான ஏற்பாடுகளை மேற் கொள்ள வேண்டுமென்றும் சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலச் செயலாளர் தோழர் ஜே. ஹேமச்சந்திரன் ஒரு அறிக்கை வாயிலாக தமிழக அரசை கேட்டுக்கொண் டுள்ளார்.

---

### கிரீன்ஹாம் தோட்டத்தில்

## வேலை நிறுத்தம்

குலசேகரம், ஜன. 3—

இன்று குமரி மாவட்டத்தி லுள்ள கிரீன்ஹாம் தோட் டத்தொழிலாளர்கள்52-வது நாளாக வேலை நிறுத்தம் செய்தனர்.

மத்தாயி, தங்கப்பன்நாயர் ஆகிய இரு தொழிலாளர் கள் இந்த தோட்டத்திலி ருந்து 2வருடங்களுக்கு முன் னர் வேலை நீக்கம் செய்யப் பட்டனர்.

இவர்களை திருப்பிஎடுக்கக் கோரி சம்பந்தப்பட்ட அதி காரிகளிடமும், தோட்ட நிர்வாகதுடனும் பேச்சு வார்த்தை நடத்திய பின்ன ரும் பயன் ஏற்படாததால் தான் சி. ஐ. டி. யூ. தலைமை யில் தொழிலாளர்கள்வேலை நிறுத்தம் செய்கின்றனர்.

வேலைநீக்கம் செய்யப் பட்டதோழர்கள் தங்கப்பன் நாயர், மத்தாயி ஆகியோர் சி. ஐ. டி. யூ. சங்கத்தின் முன்னணி ஊழியர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இவ்விருவரும் தோட்ட அலுவலகம் முன்னர் தொடர் சத்தியாக்கிரகம் இருக்கின்றனர்.

---

### மேற்குவங்க கிராமப்புறங்களில்

# விவசாயிகளின் வீரஞ்செறிந்த போராட்டம்

## குண்டர்கள்.போலீஸ் தாக்குதல் முறியடிக்கப்படுகின்றன

கல்கத்தா, ஜன. 3—

மேற்கு வங்கத்தில் கிரா மப்புறங்களில் அறுவடை தொடங்கியதும், விவசாயி களுக்கு எதிராகக் குண்டர் கள் தாக்குதல் வலுத்துள் ளது. இந்தத் தாக்குதலுக்கு போலீஸ் ஆதரவளிக்கிறது.

எனினும் ஏழை விவசாயி களும், விவசாயத் தொழி லாளர்களும் ஒன்று பட்டு நின்று நிலப்பிரபுக்கள் ஏவி விடும் தாக்குதலை முறி யடித்து தங்களுடைய அறு வடைகளைப் பாதுகாத்துவரு கின்றனர்.

காங்கிரஸ் தலைவர்கள் "விவசாயிகளைப் பாதுகாப் போம்" என்று வெற்றுக் கோஷங்களை எழுப்பிக் கொண்டிருந்தாலும், அவர் கள் போஷித்து வளர்க்கும் ஸ்தாபனங்களான இளைஞர் காங்கிரசையும், சத்திர பரி ஷத்தையும் சேர்ந்த குண் டர்கள் கிராமப்புறங்களில் பிரவேசித்து, அறுவடை களைச் சூறையாடி வருகின் றனர்.

### ஏராளமானோர் கைது

இந்தச் சூறைகளை எதிர்த்து விவசாயிகளும், விவசாயத் தொழிலாளர் களும் ஒன்றுபட்டு நிற்கும் இடங்களுக்குபோலீஸ்படை கள் அனுப்பப் படுகின்றன. போலீஸ் படைகள் கிராமப் புறங்களுக்குள் புகுந்து மக் களை அடித்து நொறுக்குவ துடன் ஏராளமான பேரை கைது செய்கின்றனர்.

மித்னப்பூர் மாவட்டத்தில் நிலச்சுவான்தாரும, போலீ சும் கூட்டுச்சேர்ந்து தாக்கு தல் தொடுத்திருந்த போதி லும் விவசாய் வர்க்கம் ஒன்றுபட்டு நின்று மூன்றி லொரு பங்குஅறுவடையை வெற்றிகரமாகநிறைவேற்றி யுள்ளது.

### நெல் மூடைகள் கொள்ளை

எனினும் சங்கிரெயில் போலீஸ் சரகத்தைச் சேர்ந்த கிராமங்களிலும், ஜார்கிராம் பிரிவைச்சேர்ந்த சபார் கிராமத்திலும் போலீ சாரும் குண்டர்களும் சேர்ந்து விவசாயிகளிட மிருந்து நெல் மூடைகளைக் கொள்ளையடித்துச் சென் றுள்ளனர்.

சந்திரி என்ற கிராமத்தில் கிராம மக்கள் ஒன்று பட்டு நின்று குண்டர்கள் தாக்கு தலை முறியடித்தனர்.

இதே போன்று காரக்பூர் போலீஸ் சரகத்தை சேர்ந்த கிராம மக்களும், குண்டர் கள் தாக்குதல்களை ஒன்று பட்டு நின்று முறியடித்த னர்.

அறுவடையைப் பாது காக்கவும், கூலி உயர்வு பெறவும் ஹவுரா மாவட்டத் தில் ஆயிரக்கணக்கானவிவ சாயிகள் அணி திரண்டுள் ளனர். காளி சதுரி பகுதி யில் கூலி உயர்வு போராட் டத்தில் அவர்கள் வெற்றி பெற்றுள்ளனர்.

இம்மாதிரி கூலி உயர்வு போராட்டங்கள் நடைபெறு வதாக சலார், ஹீராப்பூர். காந்தீப், இதார், பகிரியா போன்ற இடங்களிருந்தும் செய்திகள் வந்துள்ளன.

---

### ம. பி. மாநிலத்தில்

## சிறுமியை கெடுத்த போலீஸ் அதிகாரி

போபால், ஜன- 2—

மத்தியப்பிரதேச மாநிலத் தில் சிந்த்வார போலீஸ் நிலையத்தில் ஒரு ஏழைச் சிறுமி சப்இன்ஸ்பெக்டரால் கற்பழிக்கப்பட்டாள்.

இந்த போலீஸ்நிலைய சப் இன்ஸ்பெக்டர் எஸ்வி என் பவர் இதை யொட்டி கைது செய்யப் பட்டார்.

இதையொட்டி மத்தியப் பிரதேச சட்டமன்றத்தில் எதிர்கட்சி உறுப்பினர்கள் கார்சார விவாதம் நடத்தி னர்.

இறுதியில் போலீஸ் அமைச்சர் ரான்விஜய் இச் சம்பவம் உண்மைதான் என்று ஒத்துக்கொண் டார்.

---

### 12அவுன்ஸ்ரேஷன்தருக, பஞ்சாயத்துதேர்தல் உடனே நடத்துக

# கேரளத்தில் எதிர்க்கட்சிகள் தீவிரக் கிளர்ச்சி நடத்த முடிவு

கொச்சி, ஜன. 2—

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி உள்பட கேரளத்தி லுள்ள ஐந்து எதிர் கட்சிகள் நேற்று இங்கு கூடி 12 அவுன்ஸ் ரேஷன் கிடைப்பதற்காக வும், விலைவாசி உயர்வை கட்டுப்படுத்தக் கோரியும், உடனடியாகபஞ்சாயத்துத் தேர்தல்கள் நடத்த வற்பு றுத்தியும் தீவிரக் கிளர்ச்சி நடத்த முடிவு செய்துள் ளன.

இந்தக்கூட்டத்திற்குமார்க் சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் தோழர் ஈ. எம்.எஸ் நம்பூதிரிபாட் தலைமை வகித் தார்.

தீர்மானங்களை விளக்கி பத்திரிகையாளர்களிடம் பேசிய தோழர் விஸ்வாம்ப ரன் (சோசலிஸ்ட் கட்சி) ஜனவரி 6 ம் தேதி எதிர்கட் சிகளின் சிறப்பு மாநாடு கொச்சியில் நடக்கவிருக் கிறது என்றும் அம்மாநாடு இது பற்றிய போராட்டத் திற்கு இறுதிவடிவைக் கொடுக்குமென்றும் தெரி வித்தார்.

மேலும் அவர் பேசுகை யில் கேரள மக்கள் சென்ற 6 மாதகாலமாக12அவுன்ஸ் ரேஷன் கோரி போராடு கின்றனர் என்றும் முதலில் இக்கோரிக்கையை பரிசீ லிப்பதாகச்சொன்னகேரள அரசு பின்னர் 6 அவுன்ஸ் ரேஷன்தான் தரமுடியும் என்று சொல்லியுள்ளது கண்டனத்துக்குரியது என் றும் கூறினர்.

---

## ஸ்டீவர்ட்ஸ் அண்ட் லாயிட்ஸ் தொழிலாளர் வேலைநிறுத்தம்

சென்னை, ஜன. 1—

பிரிட்டிஷ் அரசுக்குச் சொந்தமான ஸ்டீவர்ட்ஸ் அண்ட் லாயிட்ஸ் தொழிற் சாலை அம்பத்தூர் தொழிற் பேட்டையில் உள்ளது.

இந்தியா முழுவதும் பல் வேறு இடங்களில் உள்ள இத் தொழிற்சாலையில் மொத்தம் 3000க்கும் அதிக மான தொழிலாளர்கள் பணியாற்றுகின்றனர்.

எனினும் மிகப்பெரும் பாலோர் நிரந்தரம் செய்யப் படாமல், குறிப்பிட்ட வேலை முடிந்ததும் வெளியேற் றப்படுவதே இங்கு வழக்க மாக உள்ளது.

இதனை எதிர்த்து வேலை நிரந்தரம், ஊதிய உயர்வு போன்ற கோரிக்கைகளுக் காக கடந்த ஒரு மாதத் துக்கு மேலாக அம்பத்தூர் தொழிலாளர்கள் உள்ளி ருப்பு வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர். இப்போ ராட்டத்துக்குத் தொழிலா ளர்கள் அனைவரும் ஆதரவு அளிக்குமாறு அம்பத்தூர் தொ. பேட்டை மற்றும் பொறியியல் பணியாளர் சங்கத்தின் (சி. ஐ. டி. யூ) துணைச் செயலாளர் இரா. ஜவஹர் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

---

# எல்ஐசி நிர்வாகத்தின் பழிவாங்கும் போக்கு

## பேச்சுவார்த்தை முறிந்தது

### சென்னையில் 10 பேர் சஸ்பெண்ட்

சென்னை டிச. 2—

எல். ஐ. சி. ஊழியர்கள் ஊதிய உயர்வு போன்ற கோரிக்கைகளுக்காகப் போராடி வருவது தெரிந் ததே. நிர்வாகம் தன்னு டைய பிடிவாத போக்கைக் கைவிடாததால் பேச்சு வார்த்தை முறிந்தது.

பம்பாய் பகுதியில் வேலை பார்க்கும்ஊழியர்கள்14பேர் சஸ்பெண்டு செய்யப்பட்டி ருக்கிறார்கள். இதுதவிர. நாகபுரி, ராஜ்கேட். அகம தாபாத், நாசிக், இன்னும் பல்வேறு பகுதிகளில் ஊழி யர்களை நிர்வாகம் சஸ் பெண்ட் செய்து-பழிவாங்கி யிருக்கிறது.

### சென்னையில்

சென்னை நகரத்தில் 10 பேருக்கு சஸ்பெண்டு உத்தரவுகள் கொடுக்கப் பட்டிருக்கிறது. தோழர்கள் நடராஜன், ராஜப்பா, ராஜா ராம், ரங்கநாதன் போன்ற தோழர்களும், மற்றும் 7 தோழர்களும் சஸ்பெண்டு செய்யப் பட்டிருக்கிறார்கள். சஸ்பெண்டு செய்யப்பட்ட தோழர்கள் அலுவலகத் திற்கு வரக்கூடாது என் றும், அவர்கள் அப்படிவந் தால், அத்துமீறி வந்ததாக அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்படுமென்றும்,உத்தி ரவில் கூறப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. இதனை எதிர் த்து, அலுவலகம்முன் ஊழி யர்கள் ஆர்ப்பாட்டம் நடத் தினர்.

எல். ஐ. சி. ஊழியர்கள் தங்கள் 'விதிப்படிவேலை' போன்ற போராட்டங்களைத் தொடர்ந்து நடத்தவிருக்கி றார்கள் நிர்வாகத்தின் பிடிவாதத்தையும், பழிவாங்கும் போக்கையும், ஒதுக்கித்தள்ளி, தங்களின் நியாயமானகோரிக்கைகள் வெற்றிபெற எத்தகைய போராட்டத்தையும் நடத்து வதில், எல். ஐ. சி. ஊழியர் கள் தயாராக இருக்கிறார் கள்.ஜனவரிமாதம் 8ம்தேதி வெளிநடப்பு செய்யவிருக் கிறார்கள். அதே தேதியில் அகில இந்திய காப்பீட்டு ஊழியர் சங்கத்தின்தலைமை செயலகம கூடி, மேற் கொண்டு நடக்கவேண்டிய நடவடிக்கைகள் பற்றி முடிவு செய்யும்.

ந. நி.

(முந்தைய விவரம் 2-ம் பக்கம் பார்க்க)

### வேலூர் எல்.ஐ.சி. ஊழியர் ஆர்ப்பாட்டம்

வேலூர், ஜன. 2—

வேலூர் வட்டாரத்தில் உள்ள அனைத்து எல் ஐ சி ஊழியர்களும் கடந்த 28-ந் தேதியன்று முழுவேலைநிறுத் தம் செய்தனர்.வேலூர்,திரு வண்ணமலை, ராணிப் பேட்டை முதலிய பகுதி கலில் அனைத்து ஊழியர் களும் வேலை நிறுத்தத்தில் கலந்து கொண்டனர். மத் தியஅரசின் ஊதியமுடக்கக் கொள்கையால், எல். ஐ. சி. ஊழியர்களின் கோரிக்கைகளை ஓராண்டு காலமாக தீர்த்து வைக்கப் படாமலிருப்பதைக் கண் டித்தும்.

ரூபாயின் மதிப்பு 36 கா சாகக் குறைந்துவிட்டதால் அதைச் சரிக்கட்ட சம்பள உயர்வும். விலைவாசி உயர்வை ஈடுசெய்ய கிராக் கிப்படியில் முழு நிவாரண மும், அடிப்படைச்சம்பளத் தில் 15 சதவீதம் வீட்டு வாடகை, போனசாக 3 மாதச் சம்பளம் ஆகிய கோரிக்கைகளை வற்புறுத்தி இந்த வேலை நிறுத்தம் நடந் தது.

வேலை நிறுத்தம் செய்த ஊழியர்கள் மாலை வரை, தங்களது அலுவலகங்கள் முன் அமர்ந்து கோரிக்கை களை எழுப்பி ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

---

## பிரிட்டனில் தொழிலாளர்களுக்கு மீண்டுமொரு பாதகம்

லண்டன், ஜன. 2—

ஏற்கெனவே 4 லட்சம் தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்து, அவர்களை தெருவில் நிறுத்திய பிரிட் டிஷ் ஏகாதிபத்தியம் இப் போது தொழிலாளர் களுக்கு வாரத்திற்கு 3நாள் மட்டும் வேலை என்ற முறையை கடைப்பிடித் துள்ளது. இதனால் பிரிட் டன்தொழிலாளர்கள் அவர் களின் மொத்த மாத வரு மானத்தில் பாதியை இழக் கிறார்கள்.

### நெருக்கடியின் உச்சி

2-வது உலகப் போருக் குப்பின் நொறுங்கி விழுந்து கொண்டிருந்தது பிரிட்டிஷ் பொருளாதாரம். ஆனால் சமீபத்தில் ஏற்பட்டுள்ள எண்ணெ பற்றுக்குறை யினால் அது நெருக்கடி யின் உச்சிக்கு சென் றுள்ளது.

### நெருக்கடி சமாளிப்பாம்

பொருளாதார நெருக்கடி யிலிருந்து நாட்டை விடு வித்தல் என்ற பெயரில் 4 லட்சம் தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்த பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் மீதித் தொழிலாளர்களுக்கு வாரத்தில் 3 நாட்கள்வேலை கொடுக்குமாம்.

வேலையிலிருந்து தொழி லாளர்களை நீக்கி பட்டினி போடுவது தான் முதலா ளித்துவத்தின் பொருளா தார நெருக்கடியை சமா ளிக்கும் ஏற்பாடுகளாம். ஊதிய முடக்கம் செய் வதும், ஆட்குறைப்பு செய் வதும் பொருளாதாரநெருக் கடியை சமாளிக்கும் முயற் சிகளாம்.

---

## டெல்லியில் ..

கலந்து கொண்டனர்.

டாக்சிகள் அனைத்தும், பார்லிமெண்ட் மாளிகைக்கு அருகில் உள்ள போட் கிளப்பிற்கு ஊர்வலமாக வந்தன. அங்கு கூட்டம்நடந் தது.

பின்னர்டாக்சிகள்அனைத் தும் ஊர்வலமாக பிரதமர் இந்திரா வீட்டை நோக்கிச் சென்றன. ஆனால், அதற்கு முன்னதாகபோலீசார்வந்து ஊர்வலத்தினரைத் தடுத்து விட்டனர்.

அதன் பின்னர் 5 பேர் கொண்ட தூதுக்குழுஒன்று பிரதமரைச் சந்தித்தது.

பெட்ரோல் விலை உயர் வுக்கு ஆட்சேபம் தெரிவிக் கும் மகஜர் ஒன்றை பிரதமரி டம் அளித்த தூதுக் குழு வினர், முன்னால் இருந்த விலைக்கே பெட்ரோல் வழங் கப்பட வேண்டும் என்று வற்புறுத்தினர்.

---



இந்திய கம்யூனிஸ்ட் கட்சி(மார்க்சிஸ்ட்)தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு மதுரை- 625018) அச் சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே. முத் தையா.